


**W**e have been hearing this conversation for over 30 years. Super Snowcem has been and still continues to be the first choice of the public, architects, builders, painters and dealers.

**SUPER SNOWCEM***

India's No.1 Cement Paint.




**Snowcem India Ltd.** Killick Estate, Baji Pasalkar Marg, Chandivali, Bombay - 400 072.
Tel.: 578 1482 (7 lines) • Ahmedabad - 352052, Bangalore - 572308, Calcutta - 304200, Cochin - 366583, Jaipur - 61714, Kanpur - 212461, Madras - 869301, New Delhi - 312511, Secunderabad - 842788.

*Call or write today for a free shade card.*

* Manufactured under licence from Blue Circle Industries Ltd, U.K.

VENTURE DIRECT • ADIMPACT 91504

# தி.மு.க. தலைமைக்கு வை.கோ. தலைவலி!

மதுரையில் நடந்த திராவிட இயக்க பவள விழா மாநாட்டில், முதல்நாள் காலை கருத்தரங்கத்திற்குத் தலைமை தாங்கிப் பேசிய சட்டமன்ற உறுப்பினர் பரிதி இளம்வழுதி, துவக்கத்தில் தலைவர்களின் பெயர் வரிசையில் வை. கோபால்சாமியின் பெயரைக் குறிப்பிட்ட போது எழுந்த கரகோஷம் அடங்க இரண்டு நிமிடம் ஆனது. கழகத் தொண்டர்களிடையே கோபால்சாமியின் செல்வாக்கு எத்தகையது என்பது தெரிய வந்தது. அன்று மாலை நடந்த ஊர்வலத்திலும் சரி, மறுநாளும் சரி தொண்டர்கள் மத்தியில் ''வை. கோ'', ''வை. கோ'' என்ற பேச்சுத்தான்.

''விடுதலைப்புலிகளுடன் தி.மு.க. வைச் சம்பந்தப்படுத்திப் பேசப்படுவது வை. கோவால்தான். அதனால் அவரை வெளியே அனுப்ப வேண்டும்'' என்று நினைக்கும் உயர் மட்டத் தலைவர்கள் கூட, கழகத் தொண்டர்களிடம் அவருக்குள்ள செல்வாக்கைக் கண்டு திகைத்து நிற்கிறார்கள். புலிகளுக்கு ஆதரவு தந்ததாக வை. கோவின் தம்பி கைதான பின்னும் தயக்கம்தான் தொடர்கிறது.. ''வை.கோ. கழகத்தில் இருந்தாலும் பிரச்னை, வெளியே போனாலும் பிரச்னை'' என்ற நிலை இப்போது வந்திருக்கிறது.

வை. கோ.வின் வளர்ந்து வரும் செல்வாக்கு பற்றி இளைஞர் அணித் தலைவர் ஒருவரைக் கேட்ட போது அவர் சொன்னார்: ''மதுரை மாநாட்டில் நடந்ததைப் பார்த்துக் கழகமே வை. கோ தானோ என்று நினைக்காதீர்கள்.

தலைமைக்குச் சவால் விடும் விதமாக, 'என்னை ஒன்றும் செய்ய முடியாது' என்பதைக் காட்டும் விதமாக அவரால் ஏற்பாடு செய்து கொண்டுவரப்பட்ட கூட்டம் அது! இதைக் கண்டு நாம் ஏமாறக்கூடாது. வளர்ந்து வரும் ஸ்டாலின் செல்வாக்கைப் பிடிக்காதவர்கள் வை. கோவுக்குக் கொம்பு சீவி விடுகிறார்கள். இதில் அ.தி.மு.க.வினருக்கும் பங்கு உண்டு.''

''வை கோவுக்குத் தென் மாவட்டங்களில் உள்ள கழகத் தொண்டர்களிடம் தான் செல்வாக்கு உண்டு என்று சிலர் சொல்கிறார்கள். இது தவறு. தமிழகத்தில் எந்தப் பகுதியை எடுத்துக் கொண்டாலும், வை. கோவுக்குச் செல்வாக்கு இருக்கிறது. ஒரு கால கட்டத்தில் கழகத்தின் தலைமை அவரிடம்தான் போகும் என்பது தொண்டர்களின் கணிப்பு. இந்த நிலை தலைமையிடையே ஒரு கலக்கத்தை ஏற்படுத்தி இருக்கிறது என்பதுதான் உண்மை!'' என்றார் சென்னையைச் சேர்ந்த மணிமாறன்.

''இவர் தலைமையிடம் சொல்லாமல் இலங்கைக்குச் சென்ற போதே, கழகத்திலிருந்து கழட்டி விட்டிருக்க வேண்டும். அப்போது செய்த தவறுதான் தொடர்ந்த தோல்விகளுக்குக் காரணம். இனிமேலும் தாமதிக்கக் கூடாது. புண் புரையோடும் முன் ஆபரேஷன் செய்வது நல்லது'' என்கிறார் முப்பது ஆண்டுகளாகக் கழகத்தில் இருக்கும் கன்னியப்பன்.



- கௌசல்யா

பழிவாங்குவதுதான் கதை. என்றாலும், சற்று வித்தியாசமான பழிவாங்கல். ஏழாண்டுகள் சுய நினைவே இல்லாமல் (கோமா நிலையில்) படுத்துக் கிடந்த ஸ்டீவன் ஸேகல் யாரும் எதிர்பாராத வகையில் அதிலிருந்து விடுபட்டுக் கிளர்ந்து எழ.... தொடர்வது பரபரப்பான தேடல்.

ஏழாண்டுகளுக்கு முன், போலீஸ் அதிகாரியான ஸேகல் கண்டுபிடித்தவை - உயர்மட்ட அரசியல்வாதிகள் சிலரின் ஊழல்களும் அவை தொடர்பான கொலைத் திட்டமும். இதில் முக்கிய பங்கு பெற்றிருந்தவர்கள் : தன் முன்னேற்றத்துக்குக் குறுக்கீடாக உள்ள எதையுமே சகித்துக் கொள்ளாத ஓர் அரசியல்வாதி, கொலை செய்வதைக் குழந்தை விளையாட்டாகக் கருதும் தாதா ஒருவன், போலீஸ் துறையிலேயே புல்லுருவியாக விளங்கிய ஒரு அதிகாரி. இம்மூவரும் மேற்கொண்ட எதிர் நடவடிக்கையின் விளைவாக ஸேகலின் மனைவியும் மகளும் உயிரிழக்க, பிழைத்த ஸேகல் மட்டும் கோமாவில்.

தாக்குதல் நடத்தியவர்கள் யார் யார் என்று தெரியாத நிலையில், ஏழாண்டுகளுக்குப் பிறகு, விட்ட இடத்திலிருந்து தொடங்கும் ஸேகலின் முயற்சிகள் மீதிக்கதை.

நம்மைப் பொறுத்தவரை ஆறு அடி நாலு அங்குல உயரக் கதாநாயகன் ஸ்டீவன் ஸேகல் ஒரு புதுமுகம். என்றாலும், அமெரிக்காவில், முன் அனுபவமும் நட்சத்திர அந்தஸ்தும் இல்லாத நிலையிலும் கூட எடுத்த எடுப்பிலேயே கதாநாயகனாகத் தோன்றி நாலே படங்களில் வரும் சாதனை நிகழ்த்தி, மூன்று முன்னணி நட்சத்திரங்களுள் ஒருவராக இடம் பெற்றவர்.

அதற்குமுன் - ஜப்பானில் தற்காப்புக் கலைகளில் பயிற்சி, ஆறு கறுப்பு பெல்ட்டுகள், டோக்கியோவில் தற்காப்புக் கலைப் பள்ளியைத் தொடங்கி வெற்றிகரமாக நடத்திய ஒரே வெளிநாட்டவர். சுமார் 2000 மாணவர்கள். இந்த அனுபவத்தின் காரணமாக, படத்தில் சண்டை உத்திகள் மிக இயல்பாகவும் நம்பக்கூடிய வகையிலும் அமைந்துள்ளன.

கதாநாயகியாக நடித்திருப்பவர் கெல்லி லே பிராக் - நிஜ வாழ்க்கையில் ஸேகலின் மனைவி. நடிகை, மாடல். அனேகமாக, உலகின் எல்லா ஃபாஷன் பத்திரிகைகளிலும் அட்டைப்பட அழகியாக இடம் பெற்றிருப்பவர்.

கணவன் - மனைவியாக நிஜவாழ்வில் இவ்விருவரும் கொண்டிருக்கும் அன்னியோன்யம் படத்திலும் பிரதிபலிப்பது ஒரு ப்ளஸ் பாயின்ட். ஏழாண்டுகள் நினைவற்றுக் கிடந்த ஒருவருக்கு லே பிராக் நர்ஸாகப் பரிவுடன் பணிவிடை செய்து, படிப்படியாக அந்தப் பரிவே பாசமாக உருப்பெறுவது நயமான வெளிப்பாடு.

கொசுறு : ஸ்டீவன் ஸேகலின் முந்தைய படம் 'அபவ் தி லா' இந்தியத் தணிக்கைக் குழுவினரால் அனுமதி மறுக்கப்பட்டுத் தடைக்குள்ளானது.

– சி. ஆர். கே.






# ஹார்ட் டு கில்



## சார்மினார் சானல்



★ வாரங்கல், கரீம்நகர், மெகபூப் நகர் போன்ற தெலுங்கானாப் பகுதிகளில் நக்சலைட்டுகள் சாராயம் விற்க, குடிக்க தடை விதித்துள்ளனர். காண்ட்ராக்ட் எடுக்க யாரும் முன் வராததால் போலீஸ் ஸ்டேஷன் வளாகத்திலேயே தெலுங்கானாப் பகுதியில் போலீஸ்காரர்களே சாராயம் விற்கிறார்கள்! தாங்களே சாராயம் விற்பனை செய்வதால் தங்கள் மரியாதை மோசமாகி விட்டதாய் அங்கலாய்க்கும் போலீஸ்காரர்கள், மாமூல் போய் விட்டதை நினைத்து நொந்து கொள்கிறார்கள். அரசாங்கம் இவ்வளவு பெரிய வருமானத்தை இழக்கத் தயாராயில்லை. போலீஸ்காரர்களைச் சாராயம் விற்பதில் ஈடுபடுத்துவதில் தர்மசங்கடமாய் நெளிகிறது. அக்டோபர் 2ல் இந்த 'வைபவம்' ஆரம்பமானது!

## அசோக் சம்ராட்!

★ என்.டி.ஆருக்கு அரசியல் வாழ்க்கையே நாடகமாகிவிட்டது. 1987 ல் அவரைக் கொலை செய்ய முயன்றதாக பாபிஜி என்ற இளைஞர் கைது செய்யப்பட்டார். ஸ்ரீராமுலு விசாரணைக் கமிஷன், பாபிஜியின் மரணத்தைக் கொலை என்கிறது. பாபிஜியின் கடிதமொன்று இந்த ''நாடகம்'' நடத்த ஒப்புக் கொண்டு பேசப்பட்டத் தொகை மூன்று லட்சம். முப்பதாயிரம் மட்டுமே தரப்பட்டது என்கிறது. ஸ்ரீராமுலு கமிஷன் ரிபோர்ட் பற்றி என்.டி.ஆர். மௌனம் சாதிக்கிறார். பாரத் தேசம் கனவில் மூழ்கி இருக்கிறார். சினிமா செல்வாக்கை ஏறக்குறைய இழந்துவிட்ட நிலையில் ''அசோக் சாம்ராட்'' கைகொடுக்கும் என்று நம்புகிறார்.

# குண்டர் படை ஒடுங்கியது!

சென்ற சில ஆண்டுகளாகவே குண்டர்கள் ராஜ்யம் கொடி கட்டிப் பறந்த பம்பாயில் இன்று அந்தக் கொடி இறக்கப்பட்டு விட்டது. இந்த வன்முறையாளர்கள் கொலை, கொள்ளை, கடத்தல் என்று ஈடுபட்டு வந்ததுடன் கண்டிராக்டர்கள், சிறிய-பெரிய கடைக்காரர்கள் ஆகியோரிடம் தண்டல் வசூலித்தும் வந்தார்கள். இவர்களில் பலருக்கு அரசியல் செல்வாக்கு மறைமுகப் பாதுகாப்பு அளித்து வந்ததும் உண்மை.

1991ல் தைரியமாக பம்பாயின் கமிஷனர் ராமமூர்த்தியும் இணை, துணை கமிஷனர்கள் தியாகி, கான் ஆகியோரும் நடவடிக்கை எடுத்தனர். கடைசி கட்டத்தில் துணைக் கமிஷனர் கான், அந்தேரி அருகில் ஒரு பலமாடிக் கட்டடத்தில் சில குண்டர்கள் தங்கியிருக்கிறார்கள் என்று அறிந்து, அங்கே பட்டப்பகலில் பல மணி நேரம் துப்பாக்கிச் சண்டை நடத்தி அவர்களை வீழ்த்தினார். ஏதோ சினிமா கிளைமாக்ஸ் மாதிரி தோன்றிய இந்தச் சண்டைக்குப் பிறகு குண்டர் படை இன்று அடங்கி, ஒடுங்கியிருக்கிறது.

## ஆஸ்திக அலை!

செம்பூர் செட்டா நகரில் காஞ்சி சங்கராச்சாரியார் டிசம்பர் 12 ஆம் தேதி நடத்தி வைத்த முருகன் கோயில் கும்பாபிஷேகம், பம்பாய் தமிழர்களைப் பொறுத்தமட்டில் ஒரு மகத்தான நிகழ்ச்சி. தமிழர் மட்டுமின்றி மலையாளிகளும் ஏராள மராட்டியரும் கூட வந்திருந்தனர். சில நாட்களாகவே இங்கு தங்கி உபன்னியாசங்கள், சொற்பொழிவுகள் என்று ஓர் ஆஸ்திக அலையை உருவாக்கினார் ஜெயேந்திரர்.

# சாராயம் விற்கும் போலீஸ்காரர்கள்!

## மக்களுக்கு மத்தள அடி!

★ தெலுங்கானா பகுதி மக்களுக்கு இருபுறமும் மத்தள அடி! ஒருபுறம் தங்கள் பிரச்னைகளோடு நக்சலைட்டுகளுடன் இணக்கம். இதைப் பார்த்து போலீஸின் அடக்குமுறை. நக்சலைட்டுகளுக்கு அடைக்கலம் கொடுத்தால் கடும் தண்டனை என்று மிரட்டல். என் கௌண்டர் என்ற பெயரில் சாதாரண ஜனங்களும் சாகிறார்கள். மறு புறம் நக்சலைட்டுகளுக்கு உதவாமல் இருந்தால் அவர்கள் பக்கமிருந் தும் மிரட்டல், தொல்லைகள். டிசம். 30 ம் தேதி ஆந்திரமாநில பந்தில் சுமார் 25 போலீஸ்காரர்கள் பலி ஆனார்கள். முன்னாள் மந்திரியும், சுதந்திரப் போராட்ட வீரருமான ஹயகிரீவச்சாரியை PWG (மக்கள் யுத்தக் குழு) கொன்றது எல்லோருக்கும் அதிர்ச்சி. பிரதமர் நரசிம்ம ராவின் நெருங்கிய நண்பர் ஹயகிரீவச்சாரி.



## சிரஞ்சீவியின் லட்சியம்

★ ''என் லட்சியமே என். டி. ஆரின் வெற்றியைப் போன்று வெற்றி பெற வேண்டும் என்பதுதான். அவரின் ஓடாத படங்களின் கலெக்ஷன், மற்றவர்களின் வெற்றி பெற்ற படங்களின் கலக்ஷனை விட



☛ செட்டா நகர் முருகன் கோயில்



☛ ஜெயேந்திரர்

இதன் உச்ச கட்டம் 'சர்வ தர்ம மைத்ரி பிரதிஷ்டான்' என்ற ஊர்வலம். எட்டு வெவ்வேறு மதங்களைச் சேர்ந்த வர்களை ஒன்று திரட்டி, 'பாரதீய வித்யா பவன்', மகாராஷ்டிர ஆளுனரின் ஆதரவுடன் நடத்திய இந்த ஊர்வ லத்தை சுவாமிகள் தொடங்கி வைத் தார். ஜே. ஆர். டி. டாட்டா, ஆளுனர் பி.எஸ். உள்பட பலரும் கலந்து கொண்ட இந்த ஊர்வலத்தின் நோக்கம், வேறென்ன, அமைதி, அஹிம்சை, சகிப்புத்தன்மை இவற்றை வளர்ப்பது தான்; பல்வேறு மதங்களிடையே ஒற்று மையையும் ஒப்புரவையும் நிலவச் செய்வதுதான். டிசம்பர் 15, சர்தார் பட்டேல் பிறந்த நாளன்று நடந்த இந்த ஊர்வலத்தில் பல்லாயிரக்கணக்கான கல்லூரி மாணவ மாணவிகள் தன்னிச் சையாகக் கலந்து கொண்டது கண் கொள்ளாக் காட்சி.

## உடைந்த சிவசேனா

சிவசேனா முதன் முதலாக இரண்டாக உடைந்திருக்கிறது. முன் னாள் மேயர் சாஜன் புஜ்பால் தலை மையில் சிவசேனா(பி) உருவாகி, காங்



அதிகம் என்பது நிஜம்.'' என்.டி.ஆரின் வெற்றியை நானும் அடைந்து விட்ட திருப்தி இருக்கிறது'' என்கிறார் நடிகர் சிரஞ்சீவி. அவரின் 122 வது படம் 'பிரதிபந்த்' ஹிந்திப்படம். ஹாலிவுட் படங்களை நினைவு படுத்தும் அவரின் படமொன்று ஆங்கிலத்தில் 'டப்' செய்யப்பட்டு மேல்நாடுகள் சென்றிருக்கிறது, "Hunters of the Indian Treasure" என்ற தலைப்பில். அரசியலில் என்.டி.ஆரைப் பார்த்து லட்சியம் எதுவும் கொள்ளாமல் இருந்தால் சரி.

## ரெட்டிகாருவுக்குப் பாதுகாப்பு



★ இப்படம் வடநாட்டிலோ, காஷ்மீரிலோ எடுக்கப்பட்டதல்ல. நக்சலைட்டுகளின் மிரட்டலால் ஹைதராபாத் ராஜ்பவன் ரோட்டில் உள்ள முதலமைச்சர் ஜனார்த்தனன் ரெட்டியின் வீட்டிற்கு அருகிலான போலீஸ் பாதுகாப்பைக் காட்டுகிறது.

- அப்பன்

ிரஸோடு இணைந்து, இன்று புஜ்பால் அமைச்சராகவும் ஆகிவிட்டார். ''கோட்டையிலே ஒரு ஓட்டை' என்றும், ''புலி கூண்டில் அடைபட்டது'' என்றும் பத்திரிகைகள் கார்ட்டூன்கள் வரைந்து எழுதின. பால் தாக்கரேயின் சர்வாதிகாரப் போக்குதான் பிளவுக்குக் காரணம் என்றும் கட்சியில் உயர் ஜாதியினருக்கு மட்டுமே சலுகை, பம்பாய்க்காரர்களுக்கு மட்டுமே செல்வாக்கு என்ற நிலைதான் பிளவுக்குக் காரணம் என்றும் இருவிதமாகப் பேசப்படுகிறது.





சி.எஸ்.



## 'நரன்' நாரி ஆனால்?

பம்பாய் மகாலட்சுமி லேடீஸ் கிளப் நடத்தும் நாடகங்களில் நடிப்பவர் முழுக்க முழுக்க பெண்களே. சமுதாயத்தின் அடிவயிற்றைப் பிசையும் பிரச்னைகளை எடுத்துக் கொண்டு நாடகமாக்கி டைரக்ட் செய்து நிதர்சனத்தைப் பிட்டு வைப்பதில் திருமதி ஞானம் பெயருக்கேற்பச் செயல்படுகிறார். சமீபத்திய இரு நாடகங்களின் தலைப்புக்களே இவர்களுடைய இலக்கைத் தெளிவுபடுத்தும் : 1) ''நரன் நாரி ஆனால்?'' 2) ''மாமியார் மைனஸ் இன்-லா!''

- ராஜீவி நரசிம்மன்

# “‘அஞ்சலியோட அம்மா’

ரேவதி : வெளியூரில் நீண்டதொரு ஷூட்டிங் ஷெட்யூல் முடித்து அன்றுதான் சென்னை திரும்பியிருந்தார். கல்கிக்குப் பேட்டி கேட்டபோது மகிழ்ச்சியுடன் சம்மதித்தார். சமீபத்திய இத்தாலி, க்ரீஸ் பயணத்தில் தாம் எடுத்த புகைப்படங்களைக் காண்பித்தார். (புகைப்படம் எடுப்பதிலும் எழுதுவதிலும் ஆர்வம் உண்டு)

கறுப்பு - சிவப்பு சல்வார் கமீஸில் எளிமையான அழகுடன் அலுவலக மேஜையடியில் அமர்ந்து அவர் பேச... முகபாவத்தில் மென்மையான மாற்றங்கள் இயல்பாகத் தோன்றி மறைவதைக் காண்பதே ஒரு சுவாரஸ்யமான அனுபவமாக இருந்தது...

கேள்வி : நீங்கள் பார்த்த முதல் ஷூட்டிங், நடித்த முதல் ஷூட்டிங் இவற்றை ஒப்பிட முடியுமா?

ரேவதி : நான் நடித்த ஷூட்டிங்தான், நான் பார்த்த முதல் ஷூட்டிங். பாரதிராஜா கண்டுபிடித்த புது ஹீரோயின் என்றுதான் அந்த யூனிட்டுக்கு (மண்வாசனை) நான் அறிமுகமானேன். எல்லோரிடமும் ஜாலியாய்ப் பழகினேன். அப்போது எனக்கு வயது பதினாறு. சினிமாவைப் பற்றி ஒன்றுமே தெரியாது. டைரக்டர் எதை, எப்படிச் செய்ய வேண்டும் என்றாரோ அதுமாதிரி செய்தேன். அவர் ஒரு காட்சியின் டேக்கை ஓ.கே. சொல்லி விட்டால், ‘அப்பாடா!’ என்று நிம்மதிப் பெருமூச்சு விடுவேன்.



கே : மண்வாசனை படப்பிடிப்பின் போது, ஒரு குறிப்பிட்ட காட்சியில் உங்களுக்கு நடிக்க வராத போது பாரதிராஜா உங்களை அடித்தாரே, அப்போது நீங்கள் எப்படி உணர்ந்தீர்கள்?

ரேவதி : அது என்னைப் பாதித்தது. என்றாலும், என்னைவிட என் அம்மாவைத்தான் அதிகமாய்ப் பாதித்தது. ‘போதும். இனிமேல் நீ சினிமாவில் நடிக்க வேண்டாம்’ என்று கூடச் சொன்னார். ஆனால் பாரதிராஜா சார் என்னை அடித்தது, என் முகத்தில் ஒருவித அதிர்ச்சியான பாவத்தை வரவழைப்பதற்காகத்தான். அதன்பின் என் நடிப்பில் திருப்தியடைந்ததும், என்னிடம் தன் செயலுக்கு வருத்தம் தெரிவித்து, என் நடிப்பையும் மனம் திறந்து பாராட்டினார். டைரக்டருக்கு என்னைத் துன்புறுத்தும் நோக்கம் இல்லை. என்னைச் சிறப்பாக நடிக்க வைப்பதுதான் லட்சியம் என்று புரிந்து கொண்டேன். அந்த நிகழ்ச்சிக்கு அதிக முக்கியத்துவம் தர வேண்டாம் என்று அம்மாவையும் சமாதானப்படுத்தினேன்.

கே : மண்வாசனைக்குப் பின் ஒரு திருப்புமுனையாக அமைந்த படம் என்று எதைக் கருதுவீர்கள்?

ரேவதி : ‘புதுமைப் பெண்.’

கே : எந்த வகை யில்?

ரேவதி : அந்தப் படத்தில்தான் கதாபாத்திரத்தை உணர்ந்து நடிக்க ஆரம்பித்தேன். எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் முகபாவத்தின் மூலம் ஒரு நடிகையால் எந்த அளவுக்கு வெளிப்படுத்த முடியும் என்று நான் உணர்ந்தது அப்போதுதான்.

# என்றழைத்தால் அலாதி

டைரக்டரிடமிருந்து 'டேக் ஓ.கே.' என்ற வார்த்தை வெளிப்பட்டாலே போதும் என்று அதுவரை இருந்த நிலைமாறி, சிறப்பாகச் செய்ய வேண்டும் என்று எண்ண ஆரம்பித்தேன். தவறு செய்யும்போதே, அதை உணர்ந்து திருத்திக் கொள்ளக்கூடிய பக்குவம் வந்தது. அப்படிச் செய்யும் போது மனத்தில் ஒருவித திருப்தி ஏற்படுவதையும் உணர முடிந்தது.

கே : அதாவது, நீங்கள் முன்பு நடித்த கதாபாத்திரங்களில் இப்போது நடித்தால், இன்னும் சிறப்பாகச் செய்ய முடியும் என்று நினைக்கிறீர்களா?

ரேவதி : அது கதாபாத்திரத்தையும் பொறுத்தது. உதாரணமாக, புதுமைப் பெண்ணை எடுத்துக் கொண்டால், முன்னை விட, இப்போது இன்னும் சிறப்பாகச் செய்ய முடியுமென்று நினைக்கிறேன். ஆனால் மண்வாசனை கதாபாத்திரத்தை, அதைவிடச் சிறப்பாய் இப்போது செய்ய முடியாது. ஏனென்றால், அந்த கேரக்டருக்குத் தேவையான வெகுளித்தனம் இப்போது நிச்சயம் என்னிடம் கிடைக்காது.



கே : நீங்கள் நடித்தவற்றுள் உங்களுக்கு மிகவும் திருப்தி அளித்த படம் எது?

ரேவதி : இது ஒரு சிக்கலான கேள்வி. ஒரு தாயிடம் உங்கள் குழந்தைகளுள் எந்தக் குழந்தையை மிகவும் பிடிக்கும்? என்று கேட்பதைப் போன்றது.

கே : நீங்கள் நடித்த எல்லா கதாபாத்திரங்களுமே உங்களுக்குச் சமமான திருப்தியை, சந்தோஷத்தைத் தருவது சாத்தியமில்லையல்லவா?

ரேவதி : எனக்குத் திருப்தியளித்தது எது என்று கேட்காமல், எந்த ஒரு பாத்திரத்தை நான் முழுமையாய்ப் புரிந்து கொண்டு நடித்தேன் என்று கேட்டால், என்னால் பதில் கூற முடியும். அது திவ்யா கேரக்டர்.

கே : மௌனராகம் திவ்யாவா? என்ன காரணம்?

# சுகம்!’’

ரேவதி : நானும், திவ்யாவும் வெகு நெருக்கமானவர்கள் போல, நான் அப்போது உணர்ந்தேன். அவள் எப்போது அழுவாள்? எப்போது சிரிப்பாள்? ஒவ்வொரு விஷயத்துக்கும் எப்படி ரியாக்ட் செய்வாள் என்று என்னால் உணர முடிந்தது. ஏன் அப்படி என்று கேட்டால் எனக்கு பதில் சொல்லத் தெரியாது. ஆனாலும் அப்படி உணர்ந்தேன். ஒருவேளை, இயக்குனர் மணிரத்தினம், அத்தனை தெளிவாய் திவ்யா கேரக்டர் பற்றி விளக்கிச் சொன்னது கூட அதற்குக் காரணமாய் இருக்கலாம். நானும், திவ்யாவும் சம வயதினர் என்பது காரணமாய் இருக்கலாமோ என்னவோ?

கே : நடிப்பில் இத்தனை தீவிர நாட்டம் உள்ள நீங்கள், திருமணத்துக்குப் பின் நடிக்க மாட்டேன் என்று கூறியது எதனால்?

ரேவதி : சிறு வயது முதலே, என்னைச் சுற்றி இருந்த எங்கள் குடும்பத்துப் பெண்மணிகள் அனைவருமே வேலைக்குப் போகாதவர்கள் தான். எனவே, ஒரு பெண் திருமணம் செய்து கொண்டு விட்டால், அதன்பின் அவளுக்குத் தன் வீட்டையும், குடும்பத்தையும் கவனித்துக் கொள்ளவே நேரம் சரியாக இருக்கும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். எனவே தான் விலக முடிவு செய்தேன். கல்யாணம் ஆன பின்புதான் சமைக்க ஒரு மணி நேரம் போதும் என்று தெரிந்தது. வீட்டில் எந்த வேலையுமே கஷ்டமானதில்லை என்று அறிந்து கொண்டேன். பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு, நான் நேரடியாகத் திரையுலகிற்கு வந்தவள். அதனால் வீட்டில் சும்மா உட்கார்ந்திருக்கும் சந்தர்ப்பம் அதுவரை எனக்கு ஏற்பட்டதேயில்லை. திருமணத்துக்குப் பின், வீட்டிலே உட்கார்ந்து கொண்டிருப்பது எனக்கு ரொம்பவும் கஷ்டமாயிருந்தது. இதே நேரத்தில் நான் நடிக்க வேண்டாம் என்று முடிவு செய்திருந்தாலும், எனக்கு வாய்ப்புக்கள் வந்து கொண்டே இருந்தன. ஆனால் நடிக்க மாட்டேன் என்று சொல்லி, விலகிய பின், மறுபடி நடிக்க என் 'ஈகோ' தடையாக இருந்தது. மிகவும் அனுசரித்துப் போகும் குணமுடையவர் என் கணவர் சுரேஷ். ''ஒரு வரட்டு வைராக்கியத்துக்காக, வரும் வாய்ப்புகளை நீ ஏற்றுக் கொள்ளவில்லை என்றால், பின்னர் அதற்

காக நீ நிச்சயம் வருத்தப்படுவாய்'' என்றார். யோசித்துப் பார்த்த போது என் கணவர் கூறியது சரி என்று பட்டது. நடிக்க ஒப்புக் கொண்டு விட்டேன்.

கே : திருமணத்துக்குப் பின் நீங்கள் நடித்த படங்கள் அதிகமாய் வராததற்கு என்ன காரணம்? சென்ற ஆண்டு ஒரே ஒரு படம், அதற்கு முந்தைய ஆண்டு இரண்டு படங்கள்?

ரேவதி : நான் இப்போதெல்லாம் ஒரு சமயத்தில் ஒரே ஒரு படம்தான் நடிக்க ஒப்புக் கொள்ளுகிறேன். இரண்டு மாதங்களை முழுமையாய் அவர்களுக்கு ஒதுக்கி விடுகிறேன். அஞ்சலி படத்துக்கு மூன்று மாதங்கள் ஒதுக்கிக் கொடுத்தேன். இதனால், மிகக் குறைவான படங்களையே ஒப்புக் கொள்ளுகிறேன். எனக்கு வரும் வாய்ப்புகளுள் எனக்குப் பிடித்தவைகளாய்த் தேர்ந்தெடுத்து, ஒப்புக் கொள்ளுகிறேன். எல்லாமே பிரமாதமான கேரக்டராக அமையாது என்றாலும் நல்ல சப்ஜெக்ட் உள்ள படங்களை மூளைக்கு வேலை தரும் கேரக்டர்களை நான் விடுவதில்லை.

கே : மனவளர்ச்சி குன்றிய குழந்தைகள் மீது உங்களுக்குப் பரிவு ஏற்பட்டது 'அஞ்சலி'க்கு அப்புறம்தானா?

ரேவதி : என் சிநேகிதியின் தங்கை ஒருத்தி மனவளர்ச்சி குன்றியவள். அவளைப் பற்றி நினைத்தால் பரிதாபமாய் இருக்கும். ஆனால், அத்தகைய குழந்தைகளைப் பற்றி அவர்களுடைய பெற்றோர்கள் என்ன நினைக்கிறார்கள், கூடப் பிறந்தவர்கள், சொந்தக்காரர்கள், அக்கம்பக்கத்தவர்கள், இவர்களால் அத்தகைய குழந்தைகளுக்கு என்ன பாதிப்பு என்பதையெல்லாம் என்னால் உணர முடிந்தது அஞ்சலிக்குப் பிறகுதான். இத்தகைய குழந்தைகள் குடும்பப் பிரச்னை மட்டுமல்ல. சமுதாயப் பிரச்னை என்பதை உணர முடிந்தது.

கே : பாடல் காட்சிகளில், அபத்தமான டான்ஸ் மூவ்மென்ட்ஸ் கொடுத்து ஆடும் போது உங்களுக்கு எப்படி இருக்கும்?

ரேவதி : அவையெல்லாம் ரொம்ப அபத்தம் என்பது எனக்குத் தெரியும். சினிமாவுக்கு வரும் முன் இத்தகைய பாடல் காட்சிகளை நானும், கிண்டல் பண்ணியதுண்டு. ஆனால் இந்திய சினிமா என்பது இசை, காதல், சென்டிமென்டல் மெலோடிராமா இவற்றின் அடிப்படையிலானதுதானே! நடிக்க வந்தபின், பாடல் காட்சியில் இப்படி ஆட மாட்டேன் என்றெல்லாம் சொல்ல முடியுமா? எனவே அத்தகைய அபத்தமான அசைவுகளைப் பெரிய விஷயமாய் நான் நினைப்பதில்லை. பத்து பேரை ஒரே ஆள் சமாளிப்பது நடைமுறை சாத்தியமா? ஆனாலும் சினிமாவில் ஹீரோ அதைத்தானே செய்கிறார். அப்படித்தான், டான்சும்.

கே : நீங்கள் நடனம் பயின்றவராயிற்றே! சினிமாவுக்கு வந்தபின் ரெகுலராய் பிராக்டிஸ் செய்ய முடிகிறதா?

ரேவதி : முடியலை. ஆனாலும் நேரம் கிடைக்கும்போதெல்லாம் பிராக்டிஸ் செய்கிறேன். நடன நிகழ்ச்சிகள் வழங்குவதை நான் மிகவும் விரும்புகிறேன்.

கே : அப்படியென்றால், நீங்கள் நடிக்க வராமல் இருந்திருந்தால், நாட்டியத் துறையைத்தான் தேர்ந்தெடுத்திருப்பீர்களா?

ரேவதி : நிச்சயமாக. நடனமில்லா விட்டால் வேறு ஏதாவது ஒரு மேடைக் கலையைத்தான் தேர்ந்தெடுத்திருப்பேன். பள்ளி

# ஆரோக்கியமான குழந்தைகள்–
# அழகான சமையலறை!




**இப்போது இவை**
**இரண்டையுமே அளிக்கிறது**
**"காம்ப்ளான்"**
**—புதிய "ஜார்" பேக்கிலே!**

உங்களது வளரும் குழந்தைக்கு இன்றியமையாத ஊட்டத்தை அளிக்கும் நம்பகமான காம்ப்ளான் இப்பொழுது, புதிய, அழகான உபயோகம் மிகுந்த கண்ணாடி ஜாரிலே வருகிறது. அரிசி, பருப்பு, சர்க்கரை, ஊறுகாய் முதலியவைகளை காம்ப்ளான் ஜாரில் நிரப்பி வைத்து சமையலறைக்கு எழில் கூட்டுங்கள்.

இன்றே காம்ப்ளான் வாங்கி, ஜார்களை சேகரிக்கத் தொடங்குங்கள்.

**காம்ப்ளான்®**
திட்டமிட்ட பரிபூரண உணவு.

தற்போது தேர்ந்தெடுத்த இடங்களில் — 500 கிராம் ஜாரில், சாக்லேட் ருசியிலே கிடைக்கிறது.

GX/60-202 TAM

## அடுத்த இதழில்...

● கர்நாடகத்துக்குக் கைகொடுக்கும் தமிழர்களும் ; தமிழகம் தழைக்கச் செய்யும் கன்னடத்தவரும்...
- சிறப்புக் கட்டுரை

இறுதி வகுப்புக்களில் காமர்ஸ் படித்திருந்த எனக்கு பி.காம்; எம்.பி.ஏ. படிக்கும் எண்ணம் இருந்தது. கூடவே நடனத்தில் டிப்ளமா வாங்க வேண்டும் என்றும் விரும்பினேன். ஆனால் இப்போது நினைத்துப் பார்த்தால், நடிப்புத் தவிர வேறு எதையும் என்னால் இவ்வளவு வெற்றிகரமாகச் செய்திருக்க முடியும் என்று தோன்றவில்லை.

கே : விருதுகள் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

ரேவதி : விருதுகள் சந்தோஷமும் ஊக்கமும் தருபவைதான். அவை கிடைக்காத போது, ஏமாற்றமடைய வேண்டாம். மக்களின் அங்கீகாரம் அதைவிட முக்கியமானது. விருதுகள் கிடைத்தால், மேல்தட்டு ரசிகர்களிடம் ஒருவித அங்கீகாரம், பாபுலாரிடி கிடைக்கும். நான் நடித்த ஒரு கதாபாத்திரத்தின் பெயராலேயே என்னை ரசிகர்கள் அழைக்கும் போது கிடைக்கும் சந்தோஷம் சுகமானது. மண்வாசனை ரிலீசான போது ரசிகர்கள் என்னை 'முத்து பேச்சி' என்று அழைத்தார்கள். அஞ்சலிக்குப் பின் என்னைப் பார்த்த குழந்தைகள் 'அதோ பார் அஞ்சலியோட அம்மா!' என்பார்கள். இதுதான் ரொம்ப சந்தோஷம் கொடுத்தது.

கே : நல்ல படத்தின் இலக்கணம் என்ன?

ரேவதி : அது நிச்சயம் வசூல் அடிப்படையிலான விஷயம் இல்லை. கதை, அது சொல்லப்பட்டிருக்கும் விதம், நடிப்பு, மற்றும் டெக்னிகல் விஷயங்கள் இவை அனைத்தையும் கொண்டு முடிவு செய்யப்படுவது.

கே : உங்கள் இலக்கணப்படியான நல்ல படங்கள் பல ஓடாமல் போயிருக்கின்றனவே?

ரேவதி : அப்போது வருத்தமாய்த்தான் இருக்கும். அதற்கு மக்களைத்தான் குறை சொல்ல வேண்டும்.

கே : ஒருவரின் திரையுலக வாய்ப்புக்கு அதிர்ஷ்டம் அவசியமான ஒன்றா? திறமை மட்டும் போதாதா?

ரேவதி : அதிர்ஷ்டம் மிக முக்கியம். நன்றாக நடித்திருந்தும், தொடர்ந்து இரண்டு, மூன்று படங்கள் தோல்வியடைந்தால், அதிருஷ்டமில்லாதவரென முத்திரை குத்தி ஒதுக்கி விடுவார்கள். என்னைப் பொறுத்தவரை தமிழில் பாரதிராஜா, மலையாளத்தில் பரதன் போன்ற பெரிய டைரக்டர்களால் அறிமுகப்படுத்தப்பட்டது என் அதிருஷ்டமென்றே கருதுகிறேன்.

கே : சமீபத்திய அயல்நாட்டுப் பயண அனுபவங்களைச் சொல்லுங்களேன்.

ரேவதி : சமீபத்தில் கிரீஸ், இத்தாலி நாடுகளில் கழித்த பதினைந்து நாட்கள் மிகவும் இனிமையானவை. நானும், இன்னுமொரு பெண்ணுமாய்த் தனியாகத்தான் போனோம். சரித்திரத்தில் நிறைய படித்த கிரீஸ் என்னுடைய கனவு உலகம். எந்த விதமான கட்டுப்பாடுமின்றி, கல்லூரி மாணவிகள் போல, எங்கள் இஷ்டப்படி ஊர் சுற்றிப் பார்த்தோம். பாக்கேஜ் டூர்களில் போகாமல், பல இடங்களையும் நின்று, நிதானமாய்க் கண்டு ரசித்தோம். அந்த பதினைந்து நாட்களில் நான் கற்றுக்கொண்ட புதிய விஷயங்களை, உள்ளூரில் உட்கார்ந்து கொண்டு ஐந்து வருடங்களில் தெரிந்து கொண்டிருப்பேனா என்பது கூடச் சந்தேகம்தான்.

கே : அங்கே ஏற்பட்ட மறக்க முடியாத சம்பவம் ஏதாவது?....

ரேவதி : நாங்கள் கிரீஸிலிருந்து, இத்தாலிக்கு கப்பலில் செல்லவிருந்த போது ஒரு பயங்கரமான சம்பவத்தைக் கண்டோம். அல்பேனிய நாட்டிலிருந்து மக்கள் பெருமளவில் அகதிகளாய் வெளியேறிக் கொண்டிருக்கிறார்கள் என்று நாளிதழில் படித்திருந்தோம். நாங்கள் கப்பலில் ஏறிய போது, ஒருசில அகதிகள் கப்பலினுள் புகுந்து விட்டார்கள். அவர்களை உடனடியாய் வெளியேற்றும்படி இத்தாலிய அரசிடமிருந்து கப்பலுக்கு உத்தரவு வர, அந்த அகதிகளைக் கண்டுபிடித்து, வெளியேற்றும் வேலை ஆரம்பமாகியது. நிலைமை மோசமடைவது கண்டு ஒருசில அகதிகள் கப்பலிலிருந்து, கயிறு வழியே தப்பிச் செல்ல முயற்சி செய்தார்கள். கப்பலிலிருந்த காவலர்கள் அவர்களை நோக்கிச் சுட, ஒரே அமளி. படப்பிடிப்பின் போது பல தடவைகள் துப்பாக்கி ஷூட்டிங் பார்த்திருந்த நான், நிஜமாக அப்படி ஒரு சம்பவத்தைப் பார்த்த போது, கதிகலங்கிப் போனேன். ஒரு மனிதன், தன் தாய் நாட்டை விட்டு, அகதியாய் வெளியேறுவது எவ்வளவு கொடுமையானது!

பேட்டி : எஸ். சந்திரமௌலி
அட்டை வண்ணப்படம், படங்கள் : யோகா


பந்த்!
பந்த்!
பந்த்!
கதவடைப்பு
பந்த்!
ஒன்றும் கவலைப் படாதீங்க... பந்த் நடத்திட்டோம்... சரியாப் போயிடும்!


கர்நாடகத்திலிருந்து வரும் தமிழ் அகதிகள்


அய்யோ, அய்யோ... அரிசி விலை ஏறிப் போச்சே...!


எதுக்கு சும்மா அழறே? அரிசி விலை மட்டுமா ஏறுது?
இந்தா, கர்சீப் ரெடி... கண்ணைத் தொடைச்சிக்க!
பெட்ரோல் டீசல் விலை உயர்வு
ரயில் கட்டணம் உயர்வு







# கல்கி



1992
ஜனவரி 12
மலர் : 50
இதழ் : 24
பிரஜோத்பத்தி
மார்கழி : 28


## வயிற்றிலடிக்கும் விலை உயர்வு!

ஏற்கெனவே விலைவாசி உயர்வால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் மக்களின் வயிற்றிலடிக்கும் காரியத்தை மத்திய அரசு கொஞ்சமும் இரக்கமின்றிச் செய்திருக்கிறது. அரிசி விலையை முப்பது சதமும் கோதுமை விலையை நாற்பது சதமும் உயர்த்தியிருக்கிறது. இதற்கு ஒரு விளக்கம் தர வேண்டிய கடமை தமக்கு இருப்பதாகக் கூட நிதி அமைச்சரோ பிரதமரோ நினைக்கவில்லை! அதிகாரிகளை அறிக்கை விடுமாறு ஏவி விட்டார்கள்! மக்களை அவ்வளவு தூரம் மதிக்கிறார்கள்! "வேண்டாம், வேண்டாம்! வாபஸ் பெறுங்கள், இந்த அறிவிப்பை" என்று அலறுகிறார் தமிழக முதல்வர். மத்திய அரசின் காதில் விழுந்ததாகவே தெரியவில்லை!

"விலைவாசிகளைக் குறைப்போம்" என்று நம் தலையில் அடித்துச் சத்தியம் பண்ணியது காங்கிரஸின் தேர்தல் அறிக்கை. நாம் நம்பவில்லைதான். ஆனால் ராஜீவின் மரணத்துக்குப் பின் அனுதாப அலையில் பதவிக்கு வந்த மைனாரிட்டி காங்கிரஸ் அரசு "ராஜீவின் வாக்குறுதிகளை நிறைவேற்றுவோம்" என்று சூளுரைத்தபோது, விலைவாசி குறையாவிட்டாலும் ஸ்திரப்படவாவது செய்யும் என்று நம்பினோம்; ஏமாந்தோம்.

ஐ.எம்.எஃப் எனப்படும் சர்வதேச நிதி நிறுவனத்தினிடம் கடன் பெற, இதுபோன்ற நிபந்தனைகளை அது விதிப்பதாகக் கூறப்படுகிறது. இவ்வாறு ஒரு நாட்டின் உள்விவகாரங்களில் தலையிட்டு சர்வாதிகாரம் செலுத்தும் உரிமை அதற்குக் கிடையாது. பொதுவாகப் 'பொருளாதாரத்தைச் சீர் செய்யுங்கள்; அதற்கு இன்னின்ன வழிகளை மேற்கொள்ளலாம்' என்று யோசனைகள் கூற முடியும்; அவ்வளவே. அந்த வழிகாட்டலில் நல்லதை மட்டுமே ஏற்பது விவேகம். ஏழை எளியோருக்குத் தேவைப்படும் அத்தியாவசிய உணவுப் பண்டங்களின் எக்கச்சக்க விலை உயர்வுக்கு வழி வகுக்கும் யோசனையை ஐ.எம்.எஃப் கூறியிருக்கும் என்று நம்ப முடியவில்லை. அப்படியே இது உண்மையாயினும் ஏற்க அவசியம் இல்லை. "பொருளாதார மேம்பாட்டுக்கு வேறு வழிகளைக் கையாண்டு வெற்றி காண்கிறோம்" என்று கூறி சமாதானப்படுத்துவது சாத்தியமே.

உணவுப் பொருள்கள் மக்களுக்கு மலிவாகக் கிடைக்க வேண்டும் என்பதற்காக விவசாயிகளுக்கு மான்யம் தருவதும் உண்டு; அபரிமித உற்பத்தி காரணமாக விலை குறைந்து விவசாயி அவதிப்படக் கூடாது என்பதற்காக மான்யம் வழங்குவதும் உண்டு. இந்நடைமுறைகள் மேல் நாடுகளில் இன்றும் அமுலில் இருக்கவே செய்கின்றன. ஆனால் இத்தகைய அத்தியாவசிய மான்யங்களை மேல்நாட்டு அரசுகள், இதர துறைகளில் சிக்கன நடவடிக்கைகள் மூலம் ஈடுகட்டி விடுகின்றன. நம் நாட்டிலோ உற்பத்திக்கு உதவாத ஊதாரிச் செலவினங்களுக்கு அரசு பழக்கப்பட்டுப் போய்விட்டது. மேல் நாட்டவர் பட்ஜெட்டில் நம்மைப்போல் இவ்வளவு பெரிய பற்றாக்குறையை வைத்து நோட்டு அச்சடிக்க மாட்டார்கள். அரசுத்துறை என்று ஏதும் இராது. இருந்தாலும் நஷ்டத்தில் இயங்காது. இவையெல்லாம் சேர்ந்து அவர்கள் பொருளாதாரத்தைப் பலப்படுத்துகின்றன. நம் தேசத்திலோ கடந்த பல ஆண்டுகளாகவே தாறுமாறான பொருளாதாரக் கொள்கைகள் காரணமாக அபரிமித பணவீக்கமும் கறுப்புப் பணப் புழக்கமும் ஏற்பட்டு விலைவாசிகள் உச்சாணிக் கொம்பில் ஏறிக் கொண்டன. இந்நிலையைச் சீர் திருத்துவது எளிதல்ல. ஆடம்பரத்துக்குப் பழகிப்போன அரசுக்கு இன்று சிரமமாக உள்ளது. ஐ.எம்.எஃப் மீது பழியைப் போட்டுவிட்டு மான்யங்களை நிறுத்துவது எளிதாக உள்ளது. அரிசி கோதுமை விலை உயர்ந்து மக்கள் அவதிப்பட்டால் அரசுக்கென்ன?

சுலபமான வழி எப்போதும் சிறந்த வழி ஆகாது. அமைச்சர்கள், அதிகாரிகள், எம்.பி., எம்.எல்.ஏக்கள் முதலியோருக்குப் பிடிக்காமல் இருக்கலாம். ஆனால் சிரமமான அந்த வழிகளே நாட்டை முன்னேற்றும். குறுக்கு வழிகள் புதை சேற்றில் ஆழ்த்திவிடும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

ம் பாலம் பாலம் பாலம் பாலம் பாலம் பாலம் பாலம் பாலம் பாலம்

# வாசகர்களை இணைக்கும் புதிய திட்டம்

அன்புள்ள நண்பரே!

● உங்களிடம் குறிப்பிடத்தக்க, நிருபணமான திறமை இருக்கிறது - ஆனால் அதை வெளிப்படுத்த வாய்ப்போ, பொருளாதார பலமோ இல்லை;

● உங்களிடம் முதலீடு செய்வதற்கான தொகை இருக்கிறது; தொழில்நுட்பத் திறனுள்ள நம்பகமான நபரைத் தேடிக்கொண்டிருக்கிறீர்கள்;

● உங்களிடம் நாலு நாய் குட்டிகள் உள்ளன. அன்புடன் பராமரிக்கக் கூடிய நபர்களைத் தேடுகிறீர்கள்.

● உங்களைப் போன்றே இலக்கிய ரசனை உடைய பேனா நண்பர் கிடைப்பாரா என்று ஓர் ஆவல்.

● உங்கள் பழைய புத்தகங்களை எடைக்குப்போட மனமின்றி, பயன்படுத்தக் கூடிய நபர் யார், அவருக்குத் தரலாமே என்று எண்ணுகிறீர்கள்.

இப்படி எத்தனையோ தேடல்கள்.

உங்கள் தேவையைக் குறிப்பிட்டு கல்கிக்கு எழுதுங்கள். தகுதியுள்ளவையாகக் கருதப்படுபவை முகவரியுடன் பிரசுரமாகும்.

இப்பகுதி மூலம் நீங்கள் தேடும் நபர் உங்களுடன் தொடர்பு கொள்ள, ஒரு பிரச்னை தீரலாம்; ஓர் ஆவல் பூர்த்தியாகலாம்; ஒரு சாதனை நிகழலாம்; ஒரு லட்சியம் ஈடேறலாம்.

● பாலம் பகுதியில் இடம்பெறும் கடிதங்களுக்குக் கட்டணமோ,சன்மானமோ கிடையாது.
பாலம் என்று உறைமேல் குறிப்பிட்டு இன்லாண்டு லெட்டரில் மட்டுமே ரத்தினச் சுருக்கமாக எழுதலாம்.

● பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விக்கோ இதர பிரச்னைகளுக்கோ கல்கி நிறுவனம் எவ்விதப் பொறுப்பும் ஏற்காது.

● கடிதப் போக்குவரத்து கிடையாது.

# தாய்மை அடையும் பருவத்திலே உங்கள் இருவருக்காக 'உண்ண' வேண்டுமே!

## உங்களுக்குத் தேவை அதிக ஊட்டச்சத்துள்ள

## புதிய காம்ப்ளான்® விட்டாமில்க்(T)

உங்களுக்குள் இன்னொரு புதிய உயிர், உங்கள குழந்தை வளர்ந்து கொண்டிருக்கிறது. இந்த முக்கிய நேரத்தில் உங்கள் ஆரோக்கியத்திற்கும், சிசுவின் வளர்ச்சிக்கும் போதுமான கூடுதல் ஊட்டச்சத்துக்கள் தேவை.

காம்ப்ளான்–விட்டாமில்க் உங்களுக்கும், பிறக்கப்போகும் உங்கள் குழந்தைக்கும், தேவையான ஊட்டச்சத்துக்களையும் மற்றும் காம்ப்ளானின் எல்லா நற்பயன்களையும் கொண்டது. இதில் ஃபாலிக் ஆஸிடு, பால் புரதம் (22.2 கிராம்), வைட்டமின்கள் A, $B_6$ மற்றும் C, இரும்புச் சத்து, அயோடின், கால்ஷியம், ஸிங்க் மற்றும் மக்னீஷியம், தேவையான அளவில் அடங்கியுள்ளது.




ரெகுலர் * சாக்லேட்

தினமும் 2 கப்புகள்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ

GL/V/P/91/R-TAM

# லயன் கலிலியோ



## 1

துல்லிய நீல வானம். சிறகு விரித்த
இரண்டு பழுப்புப் பறவைகள். தொலை
வில் தொடுவானத்தில் மழுப்பலாக மரகத
மலைகள். சுற்றிலும் வளமையான
வயல்கள். ஒரு ஓரத்தில் உருக்கிய வெள்ளி
யாக ஓடை. ஒற்றையடிப் பாதையில் வைக்
கோற் சுமையுடன் ஒரு பருவப் பெண் -
இத்தனையும் சித்திரமாகக் கான்வா
ஸில்! ஈடுபாட்டுடன் நான்கு மணி நேரம்
மெனக்கெட்டு மெய் வருத்தம் பாராது
கண்ட அற்புதம் அது.

ஈர பிரஷ்ஷை உதறிவிட்டுத் தான்
வரைந்த ஓவியத்தைப் பெருமிதமாகப்
பார்த்தான் பிரகாஷ். பொருத்தமாக 'கிரா
மத்து சொர்க்கம்' என்று தலைப்பிட்டிருந்
தான்.

''டிராங்கிங் நல்லா வந்திருக்கு தம்பி!''
பின்னால் குரல் கேட்டுத் திரும்பினான்
பிரகாஷ். பட்லர் பரமசிவம்.

''அது 'டிராங்கிங்' இல்லை பரமு. டிரா
யிங்! எங்கே சொல்லு பார்க்கலாம்...''
என்றவாறு வயதான பட்லரின் பஞ்சுத்
தலையைக் கலைத்து விட்டான் விளை
யாட்டாக.

''விடுங்க தம்பி! அப்பா உங்களை
அழைச்சுக்கிட்டு வரச் சொன்னாரு.''

''வர்றேன்னு சொல்லு பரமு.''

பட்லர் அகன்றதும் போர்டிலிருந்து
பின் நீக்கி கான்வாஸை விடுவித்துக் கவன
மாகச் சுருட்டிப் பத்திரப்படுத்தும் போது

பத்மா ரவிசங்கர்

அவன் முகத்தில் பரவசப் புன்சிரிப்பு.

இரண்டு நிமிட நடை தூரத்திலிருக்
கிறது அப்பா ராஜசேகரின் அறை! ஆம்.
அவ்வளவு பெரிய மாளிகை இது.

பாட்டன் வழி வீட்டை வெகுவாக
விரிவு படுத்திப் பணத்தால் இழைத்து இரச
னையுடன் மாற்றியிருந்தார் ராஜசேகர்.

மெகா மாளிகை முழுவதும் இதமான
சென்ட்ரல் ஏசி சிஸ்டம். ஆங்காங்கே அலங்
கார சாண்டிலியர்கள். கால் புதைய வைக்
கும் கார்ப்பெட். எல்லாம்... எல்லாம்
அப்பாவின் செல்வச் செழிப்பைப் பறை
சாற்றின.

''உட்காரு பிரகாஷ்.''

ஃபைலிலிருந்து கவனம் இம்மியும்
பிசகாமல், சிறிதும் நிமிராமல் - அவன்
ஓசையின்றிப் பிரவேசித்ததைக் கண்டு
கொண்ட அப்பாவின் திறமையை வியந்த
வண்ணம் எதிரில் போய் அமர்ந்தான்.

காத்திருந்தான்.

ஃபைலில் ஆழ்ந்திருக்கும் அப்பா
வைப் பெருமிதத்துடன் கவனித்தான்.

அப்பா ராஜசேகருக்கு அறுபது வயது
என்று சொல்ல முடியாத தோற்றம். சீராகச்
சீவப்பட்ட நரைத்த தலை. அவ்வப்போது
அளவான விக்கர் உபயத்தில் ஒரு மாதிரி
சிவப்பை எட்டியிருந்த கம்பீரமான முகத்
தில் எடுப்பான நாசி; வினாடியில் எவரை
யும் எடை போட்டு விடும் கூரிய கண்கள்;
வாரம் தவறாமல் ட்ரிம் செய்யப்படும் நறுக்
மீசை. இன்னமும் தளராத கட்டுக் கோப்
பான உடற்கட்டு.

அப்போது போன் ஒலித்தது. ராஜசேகர்
எடுத்தார். எதிர்முனை பேசுவதை நிதான
மாகச் செவி மடுத்தார். அரை நிமிடம்
போல் நெற்றி நரம்பு முடிச்சிட, யோச
னையில் ஆழ்ந்தார். பிறகு மளமளவென்று
ஆணைகள் பிறப்பித்தார். அவ்வளவுதான்.
போனை வைத்துவிட்டு மீண்டும் பைலில்
ஆழ -

அப்பாவின் இந்த வேகம் பிரகாஷை
அசத்திற்று. ஆனால் அவர் பேசியதில்
ஒன்றும் புரியவில்லை. 'சி' பாரம், ரா
மெட்டீரியல்ஸ், இன்வாய்ஸ் என்ற சில

வர்த்தகச் சொற்கள் மட்டும் அவனுக்குத் தட்டுப்பட்டன. அவர் மேசை மீது குவிந்திருந்த ஃபைல்கள் அவனை மலைக்க வைத்தன.

ஈடுபாடு பூராவும் ஓவியத்தில் நிலைக்கையில் அப்பாவின் விரிவான பிஸினஸ், தொழிற்சாலைகள் பற்றி என்றுமே தெரிந்து கொள்ள அவன் விரும்பியதில்லை.

சந்தர்ப்பமும் வாய்த்ததில்லை: சின்னுவிற்கு - அப்படித்தான் அம்மா அவனைச் செல்லமாக அழைப்பாள் - சிறு வயதிலேயே சென்னைத் தொடர்பு விட்டுப் போய் விட்டது. அம்மாவின் விருப்பத்தின் பேரில் ஐந்தாம் வகுப்பின் போது பிரகாஷை ஊட்டி போர்டிங் ஸ்கூல் ஒன்றில் சேர்த்து விட்டார்கள். சுதந்திரத்தைச் சுவாசித்து, உலகம் அறிந்து, முனைப்புடன் உயர் தரமான கல்வி பெற ஊட்டி உதவும் என்பது அவள் நம்பிக்கை.

எம். ஏ. வரலாறு படித்து முடித்தபோது பிரகாஷின் அம்மா அகாலமாக இறந்து போகவும் ஆறு மாதங்கள் வரை பித்துப் பிடித்தவன் போலிருந்தான். சமாதானம் செய்ய முடியாமல் ராஜசேகர் திகைத்துப் போயிருந்த சமயம் அது. இடைவிடாத ஓவியம்தான் மீள உதவியது.

பிறகு பிடிவாதமாகப் பிரகாஷ்



ஃபாரின் கிளம்பிவிட்டான். மூன்று வருடங்கள் தீராத ஓவியத் தாகமுடன் ஐரோப்பிய தலை நகரங்களில் சுற்றினான்.

அவன் வாழ்வின் அற்புதக் கணங்கள் அவை. லூவ்ர் ம்யூஸியத்தில் முறுவலிக்கும் மோனாலிசா. நாத்ர்தேமில் பதினோராம் நூற்றாண்டு வண்ணக் கண்ணாடி சன்னல்கள். அப்புறம் இம்ப்ரெஷனிஸ்ட் சித்திரச் சாலையில் டெகா, பால் கோகன், வான் காக், ரென்வார் ஆகியோரின் ஆரவார வண்ணத்தில் சி ந் னை த சிதறடித்த ஓவியங்கள்....

தற்போதும் அவனுக்குள் சிலிர்த்தது. அந்த உன்னதமான உற்சாக உலகச் சுற்றல் முடிந்து ஆறு மாதம் முன்புதான் சென்னை திரும்பி -

"பிரகாஷ்!'' என்ற அப்பாவின் சற்று அதட்டலான குரல் கேட்டு நினைவலைகளிலிருந்து விடுபட்டான்.



"என் பெண்ணுக்கு என் வீட்டுக்கே வந்து வயலின் சொல்லித் தர்றதுன்னா பீஸ் நூறு ரூபாய்; பெண்ணை உங்க வீட்டிற்கு அனுப்பிக் கத்துக்கச் சொல்றதுன்னா பீஸ் இருநூறுங்கறீங்களே, ஆச்சரியமா இருக்கே!''

"உங்க பெண்ணின் வாசிப்பை என் வீட்டில் உள்ளவர்கள் சகிக்கத்தான் சர் சார்ஜ் நூறு ரூபாய்!''

- கரம்

''இந்தா சாவி. அந்த அலமாரியைத் திற.''

சென்று திறந்த பிரகாஷ் பிரமித்தான். தலையணை தலையணையாக ஏதேதோ புத்தகங்கள் அலமாரி முழுவதும்.

''அதுல மஜும்தாரின் 'டாக்ஸ் லா' வால்யூம் டு - ஓ சாரி. உனக்குத்தான் ஏதும் தெரியாதில்லை! மூணாவது தட்டுல நாலாவது புக் எடு. உன் பாஷைல 'இலைப் பச்சைக் கலர்ல' அட்டை இருக்கும் பாரு!''

அடுத்த ஐந்து நிமிடத்தில் மூன்று முறை தொலைபேசி தொந்தரவு செய்தது அவரை.

ஒருவாறு பைலை முடித்துவிட்டு நிமிர்ந்தார் ராஜசேகர். இருக்கையில் நன்கு சாய்ந்து கொண்டு பிரகாஷைக் கூர்மையாகப் பார்த்தார்.

''மூச்சு விடக் கூட நேரமில்லை பார்த்தியா பிரகாஷ்... எத்தனை ஃபைல்ஸ்? தினசரி தலைவலிகள்....'' என்றவர் சற்று மௌனம் விட்டு, ''அசந்து தூங்கறப்ப நடுநிசில போன் வரும்! பாக்டரி ஷிப்டுல தகறாரும்பாங்க. 'டாக்'குல ராமெட்டீரியல் மாட்டிக்கிச்சா, கூப்பிடு ராஜசேகரை.....''

அலுப்பையும் மீறி அவர் குரலில் ஒருவித பெருமித சரிகை இழையோடியதைக் கவனித்தான்.

''எனக்கும் அறுபது வயசாயிருச்சு பிரகாஷ். பிரஷர் ஏகமா ஏறுகிறது. யூ நோ ஒன் திங்? இப்பல்லாம் நடந்தா மூச்சு இரைக்குது!'' என்றவர் முறுவலித்துவிட்டு, ''இனி ஒய்வா ஒதுங்கி உன் கைல எல்லாப் பொறுப்பையும் ஒப்படைச்சுடலாம்னு இருக்கேன்பா.''

பிரகாஷ் பதற்றமாக, ''ஐயையோ. உங்க ராட்சஸ பிஸினஸை என்னால கவனிக்க முடியாதுப்பா!''

''பயப்படாதே பிரகாஷ். ஓவர் நைட்டுல உன் தலைல சுமத்திடமாட்டேன். மெல்லக் கொஞ்சம் கொஞ்சமா செய்யலாம். எனக்கு உடல்ல வலு இருக்கிறப்பவே எல்லாம் கத்துத் தர்றேன் என்ன?''

''சாரி டாடி. எனக்கு இந்த பிஸினஸ் லைன்ல சுத்தமா விருப்பம் இல்லை!'' என்றான் உறுதியான குரலில்.

''அப்போ காலம் பூராவும் நீயே கஷ்டப்பட்டு சா வு ன் னு சொல்றியா பிரகாஷ்?'' என்றார் கடுப்பாக. ராஜசேகருக்குக் கோபத்தில் இலேசாக மூச்சு வாங்கியது.

''இல்லைப்பா! பிஸினஸை நிறுத்திருங்கன்னு சொல்ல வர்றேன். நீங்க சம்பாதிச்ச பணம் பல தலை முறைக்கு ஒரு பட்டாளியனே உட்கார்ந்து சாப்பிட்டாலும் கரையாது! அப்புறம் வீணா ஏன் கஷ்டப்படணும்? வைண்டப் ப்ளீஸ்.''

தாமதமாகத் தவமிருந்து பெற்ற தன் ஒரே வாரிசின் பொறுப்பின்மையில் வருத்தம் மிக, ''என் கிட்ட இரண்டு பாக்டரி இருக்கு. ஒரு சிட் பண்டு நடத்தறேன். மருந்து வாங்கி விற்க மூணு ஏஜன்சி வெச்சிருக்கேன். ரியல் எஸ்டேட், பிலிம் டிஸ்டிரிப்யூஷன் பார்க்கறேன். இன்னும் என் பிஸினஸ் பட்டியல் நிறைய இருக்கு பிரகாஷ். எல்லாம் என் அசுர உழைப்பின் பலன். என்னை நம்பி எத்தனை வயிறு இருக்கு தெரியுமா? அத்தனையும் பாதியில விட்டுட்டு வான்னு சொல்றியேப்பா....!'' என்றார் ராஜசேகர்.

❑ ஆல்பர்ட் வில்லியில் 1992 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் நடைபெற உள்ள குளிர்காலப் போட்டிகளில் பங்கு பெறுபவர் ஆணா? பெண்ணா? எனக் கண்டுபிடிக்க அவர்களுடைய உமிழ்நீர் பரிசோதனைக்கு உள்ளாகுமாம்.

1966-ஆம் ஆண்டு ஆஸ்திரியாவைச் சேர்ந்த எரிகாஸ்னிகர் பனிச் சறுக்கில் தங்கப் பதக்கம் வென்றார். 22 ஆண்டுகள் கழித்து எரிகாஸ்னிகர் பெண் அல்ல ஆண் என்பது தெரியவந்தது.

- கே. வி. நாதன்



பிரகாஷ் மௌனமாக அவரையே பார்த்தான்.

''முந்தாநாள் ஒரு மந்திரி என்னை விருந்துக்குக் கூப்பிட்டார். ஒரு பிரபல பத்திரிகை என்னைப் பத்திக் கவர் ஸ்டோரி எழுத ஒரு வாரமாக் காத்திட்டிருக்கு. நாளை ஒரு எக்ஸிபிஷனுக்கு ரிப்பன் வெட்டறேன். என்னைச் சந்திக்க எல்லோரும் ஏன் அல்லாடறாங்க?

''பணம்! என் அபரிமித செல்வம்தான் காரணம் பிரகாஷ். கையில் காசு காணலைன்னா ஒரு நாயும் நம்மைச் சீந்தாது மை டியர் சன். எஸ்! பணம்தான் மரியாதை; மதிப்பு; பவர்; வாழ்க்கை; எல்லாம். பணத்தைப் பணத்தோட சேர்த்துப் பெருக்கிக்கிட்டே போகணும். அதனால பட்டுன்னு பதில் சொல்லாதே பிரகாஷ். அவசரமில்லை. நிதானமா யோசிச்சு நல்ல பதிலா பிறகு சொல்லு.''

''சாரி டாட்! எனக்கு பிஸினஸ் தெரியாது; பிடிக்காது; விருப்பமில்லை. என் வழியில என்னை நிம்மதியா இருக்க விடுங்க.''

''என்ன உன் வழி?'' என்றார் ஆயாசமாக.

கண்கள் கனவில் லயிக்க, ''ஓவியம்!'' என்றான்.

ஓவியத்தை ஒரு மோசமான வார்த்தையுடன் இணைத்து தன் வெறுப்பை வெளிப்படுத்த எழுந்த விருப்பத்தைப் பிரயாசையுடன் அடக்கிக் கொண்டார் ராஜசேகர். அனுபவமின்மையால் ஏதோ பிதற்றுகிறான். அவ்வளவு சுலபத்தில் நம்பிக்கை இழப்பவரல்ல அவர்......

அறைக்குத் திரும்பியதும் பிரகாஷ் தூரிகை தூக்கிக் கொண்டான். வானவில்லை வண்ணத்தில் வளைக்க விரும்புபவனுக்கு வர்த்தகமாம். என்ன ஒரு நான்சென்ஸ் இது! இருக்கும் கடலளவு செல்வம் போதாதா......

அவன் விருப்பத்திற்கேற்ப அனாயாசமாக பிரஷ் வளைந்தாலும் கவனம் வரைவதில் நிலைக்கவில்லை. திக்கென்று மனதில் கவலை சூழ்ந்து கொண்டு விட்டது.

கவலைக்குக் காரணம் சிந்துஜா; அவனின் ஆருயிர்க் காதலி. சிந்துஜா அசாதாரண அசத்தும் அழகிதான். ஆயினும் சமுதாயத்தில் ஒரு சாதாரணள். பணம் X பணம் செய்யும், ஸ்டேட்டஸ் பார்க்கும் தன் தந்தை, தங்கள் காதலை அங்கீகரிப்பாரா..... திருமணத்திற்கு ஒப்புக் கொள்வாரா....

அந்த மைதானத்தில் நடக்கவிருக்கும் பயங்கரத்தைப் பார்க்க அஞ்சியவன் போல் சூரியன் மேற்கில் அவசரமாகப் பதுங்கிக் கொண்டிருந்த சிவந்த அந்தி மாலை.

அ.உ.மு. கட்சியின் அ ர சி ய ல் 'கொள்கை' விளக்கப் (!?) பொதுக் கூட்டம் கன ஜோராக நடந்து கொண்டிருந்தது.

மைதானம் கொள்ளாத அளவு ஆரவார மக்கள் வெள்ளம். பத்தடிக்கு ஒரு குழல் விளக்கு; பிளிறும் ஸ்பீக்கர். வண்ண விளக்குகள் ஜடாட சரிகை சரங்கள் தொங்கப் பிரமாதமாக அலங்கரிக்கப்பட்டிருந்த மேடை. 'பேச்சாளர்கள்' எதுகை மோனையில் ஏற்றம் இறைத்துக் கொண்டிருக்க.....

ஆங்காங்கே லத்தி சுழற்றியபடி போலீஸார். தகதகத்த மேடையின் நடுநாயகமாகப் பிரதான இருக்கையில் பிரபல சினிமாக் கதாநாயகன் ஆனந்த் குமார். அடுத்ததாகக் கட்சியின் முக்கியப் புள்ளி குணமூர்த்தி. பின் இருக்கைகளில் ஏனையோர்.

பேச வந்த ஒரு வட்டம், ''கொள்கைச் செம்மலே! தங்கத் தலைவனே!'' என்று விளிக்க, கூட்டம் கரகோஷித்தது. இதே ரீதியில் கட்சிப் பிரமுகர்கள் சகட்டுமேனிக்கு ஆனந்தைப் புகழ்ந்து தள்ள -

'என்ன ஒரு அக்கிரமம்டா சாமி!' என்று தன் மனத்துக்குள் பொருமிக் கொண்டிருந்தார் குணமூர்த்தி. நேற்று வரை தன்னை அண்டியிருந்த பராரிகள் இவர்கள். ஹீரோ ஆனந்த்குமாரின் கவர்ச்சிப் புன்னகை அவருக்கு எரிச்சலூட்டியது. இன்று இங்கே அவன் தலைமை உரையாம். ராஸ்கல்! இவனுக்கு என்ன தெரியும்? அரிதாரம் பூசிக் கொண்டு ஆர்க் வெளிச்சத்தில் கையைக் காலை ஆட்டிவிட்டால் போதுமா? பொது வாழ்வில் எவ்வளவு ஏற்ற இறக்கங்கள் பார்த்திருப்போம் என்று நினைத்தார் குணமூர்த்தி.

சிராகத் திட்டமிட்டு முன்னேறி கட்சியில் நான்கு வருடங்களாக இரண்டாம் இடம் அவர்தான். வயதான தலைவருக்குப் பின் தான்தான் என்று கனவுடன் காத்திருந்தபோது கட்சியில் ஒரு மாதம் முன்பு இந்த நடிகனின் திடீர்ப் பிரவேசம்! தற்போது உள்ள இடமே ஆட்டம் கண்டு விட்டது.

ஆனால் குணமூர்த்தி ஒன்றும் ஏமாளியல்ல. கமுக்கமாக ஒரு இரண்டு மாங்காய்த் திட்டம் போட்டுவிட்டார். ஆ யி ற் று. ஆனந்த்குமாருக்கு ஆயுள் இன்னும் சில மணித் துளிகள்தான்.....

திரும்பவும் கட்சியில் அவர் மதிப்பு புதுப்பிக்கப்பட்டு விடும்; ஆனந்தின் இறப்பினால் வரும் அனுதாபம் கட்சிக்கும் வலு சேர்த்து விடும்; கொன்றது எதர்க்கட்சியா என்று சந்தாய்க்கும் மூன்றாவது மாங்காய் சான்சும் உண்டு.

எப்போது? எப்படி? எங்கிருந்து? இந்த மூன்று கேள்விகளும் மனத்தில் வலம் வர, குணமூர்த்தி நர்வசாக நாற்புறமும் தன் பார்வையைச் சுழற்றினார்.

ஆனால் அவர் கண்ணுக்கெட்டாத தூரத்தில் காத்திருந்தான் சோமையா.....

அந்த மைதானத்தின் விளிம்பில் உருவாகிக் கொண்டிருந்த ஃபிளாட்டுகளில் ஒன்றின் இரண்டாம் மாடியைத் தேர்ந்தெடுத்திருந்தான் சோமையா. ஏகாந்தமான இடம். சுற்றிலும் இருள். கீழே மயக்கப் படுத்தப்பட்ட வாட்ச்மேன். ஆக, ஒன்றும் பிரச்னையில்லை என்று திருப்தியானான் சோமையா. சாக்குப் பையிலிருந்து ஒரு பைனாகுலரையும் சக்தி வாய்ந்த ஒரு டெலஸ்கோப்பிக் ரைஃபிளையும் எடுத்தான். லைட்டரை உயிர்ப்பித்தான்.

இரண்டாம் மாடி ஜன்னல் வழியாகப் பைனாகுலரில் பார்த்தான் சோமையா. வாரி இறைத்திருந்த வண்ண பல்புகள் கண்ணைக் கூச வைத்தன. குணமூர்த்தி பேசிக் கொண்டிருப்பது தெரிந்தது. அடுத்து 'இறுதியாக'ப் பேச இருப்பது ஆனந்த் குமார்தான். பைனாகுலரை ஃவத்து விட்டு ரைஃபிளை எடுத்தான்.

அதன் பேரலைத் தோளில் சாய்த்து வைத்து டெலஸ்கோப் லென்சில் ஒற்றைக் கண் பதித்துப் பார்த்தான்.

மைக் அருகில் ஆனந்த் வந்ததும் சட்டென்று சுட்டுவிட்டு சடுதியில் மாயமாகி விட வேண்டியதுதான். தப்புவது ஒன்றும் பிரச்னையில்லை. இருப்பினும் ஒரு முன்னெச்சரிக்கையாக சோமையாவின் இரு ஆட்கள் அ.உ.மு. கட்சிக் கரை வேட்டி அணிந்து கூட்டத்தில் கலந்திருக்கிறார்கள். பிரச்னை ஏதும் எதிர்ப்பட்டால் குழப்பம் விளைவிக்க ஒரு 'ஏற்பாட்டுடன்' இருவரும் வந்துள்ளார்கள். தனக்காகத் தன் ஆட்கள் உயிரையும் கொடுப்பார்கள் என்று பெருமிதமுடன் நினைத்தான்.

தன் சட்டையில் எம்பிராய்டரி செய்யப் பட்டிருந்த ஆக்ரோஷ சிங்கத் தலை இலச்சினையைப் பரவசமுடன் பார்த்துவிட்டு லைட்டரை அணைத்தான். சிலிர்ப்புடன் தலையைக் குலுக்கிக் கொண்டான் சோமையா. நோ! அம்மாதிரி சந்தர்ப்பம் என்றும் வராது. டான் கலிலியோ என்றுமே தோற்றதாகச் சரித்திரம் கிடையாது.... தந்திரமான திட்டத்தின் - துல்லிய செயல்பாட்டின் - மறு பெயர் டான் கலிலியோ. இதோ இப்போது அவன்.....

அவன் முறை வந்ததும் ஆனந்த் குமார் ஆர்வமாய் எழுந்து கொண்டான். கூட்டம் நானாவித ஒலி எழுப்பியது. 'நாளைய சி.எம். நான்தான்' என்ற உற்சாகக் கனவுடன் மைக்கை அடைந்தான்.

தோளில் ரைஃபிள் சார்த்தித் தயாரானான் சோமையா.

இதுவும் ஒரு பாத்திரம்; நடித்து வெளுக்க வேண்டியதுதான். தயங்காமல் தாராளமாகப் பொய் சொல்வது அரசியல் அரிச்சுவடி என்பதை நினைவில் நிறுத்திக் கொண்டு, ''என் உயிரினும் மேலான....'' என்று ஆரம்பித்தான் ஆனந்த்.

ரைஃபிளை ஆயத்தமாக்கிவிட்டான் சோமையா. உணர்ச்சி பாதிப்பேதுமின்றி இருந்தான்.

''உங்க அன்பு எனக்கு மெய் சிலிர்க்குது. உங்களை மகிழ்விக்க நடிச்சேன். உங்களுக்குத் தொண்டு செய்யவே இப்போ கட்சியில சேர்ந்திருக்கேன்!'' என்று ஆனந்த் தொடர,

லென்ஸ் அட்ஜஸ்ட் செய்ய நடிகன் ஆனந்த் குமாரின் நெற்றிப் புருவம் துல்லியமாக அருகாக வந்தது. க்ராஸ் ஹேரின் மையப் புள்ளி புருவத்தில் நிலைக்க....

''உங்களுக்காக என் உயிரையும் -''

சோமையா டிரிகரைச் சுண்டினான். புல்லட் புயலாய்ப் புறப்பட்டது....

(தொடரும்)

❑ ''எனது பெயருடன் டாக்டர் பட்டத்தையும் சேர்த்துப் பெருமைப்படுத்துவதை நான் விரும்பவில்லை. நான் எந்த விஷயத்தையும் பற்றி ஆராய்ச்சி பண்ணினதற்குப் பெற்ற பட்டங்கள் அல்ல இவை. பல்கலைக் கழகங்கள் அபிமானத்தின் மீது அளித்தவை. அதற்கு நான் நன்றி கூறக் கடமைப்பட்டவனே தவிர, அதைப் பெருமையாகக் கொள்ள உரிமை உடையவன் அல்ல. குடும்பத்தில் எப்படி எல்லாமோ செல்லப் பெயரைச் சொல்லி அழைக்கலாம். ஆனால் அதை எல்லா இடத்திலும் மற்றவர்கள் கூறினால் எப்படிச் சரியாக இராதோ அதைப் போலவே இதுவும்!''

- சொன்னவர் மூதறிஞர் இராஜாஜி

- வி. பிரசன்னா



# நிகரற்ற வெண்மை தரும்
# உண்மையான திரவ நீலம்

# நில்சின்
## சூப்பர் நீலம்

இது துணிகளைக் கெடுக்கும்
மட்டமான சொட்டு நீலம் அல்ல.

நீரில் சரியாக கரையாமல்
துணிகளில் ஒட்டும் ஒட்டு நீலம் அல்ல.

நில்சின் சூப்பர் முதல் தரமான திரவ நீலம்.
அதிநவீன விஞ்ஞான முறைப்படி
தயாரிக்கப்படுவது. விரைவாகவும்
சீராகவும் நீரில் கரையும்.
துணிகளின் இழைகளில் ஊடுருவி,
நீடித்து நிற்கும் நிகரற்ற வெண்மை
அளிக்கிறது.

மென்மையான நறுமணம் உள்ள
நில்சின் எல்லாவகைத் துணிகளுக்கும்
ஏற்றது. துணிகளுக்கும் கைகளுக்கும்
எவ்விதக் கெடுதலும் செய்யாது.

**nilsin super**

LIQUID BLUE




தயாரிப்பு : நில்சின் கெமிக்கல்ஸ் பி. லிட். அகமதாபாத். விற்பனை : குந்தல் ஏஜென்சீஸ் சென்னை 600 108.

# பன்றிகளால் பரவும் பயங்கர நோய்!



'மூளைக் காய்ச்சலுக்கும் பன்றிக்கும் என்ன சார் சம்பந்தம்? இந் நோயின் அறிகுறிகள் என்ன? இந் நோயினால் எந்த உறுப்புகள் பாதிக்கப்படும்...?' எனக் கேள்வி களை அடுக்கியிருக்கிறார் வாசகர் ஜி. ஜி. கிருஷ்ணன்.

அக் கேள்விகளுக்குப் பதில் அளிப்பவர் நரம்பியல் மருத்துவர் டாக்டர். வி. அனந்த்.

**ம**லேரியா, யானைக்கால் போல மூளைக் காய்ச்சலும் கொசுக்கடியால் ஏற்படுவதுதான். பன்றிகளைக் கடிக்கும் கொசுக்கள், அவற்றின் உடலிலிருந்து மூளைக் காய்ச்சல் நோய்க் கிருமிகளைச் சுமந்து வருகின்றன. இதே கொசுக்கள் மனிதர்களைக் கடிக்கும் போது அக் கிருமிகள் மனித உடலுக்குள் செலுத்தப்படுகின்றன; மூளைக் காய்ச்சல் ஏற்படுகிறது. குறிப்பிட்ட சில மாதங்களில் மூளைக் காய்ச்சல் நோய்க் கிருமிகள் பன்றிகளிடத்தில் அதிகமாய் இருக்கும். அந்தச் சமயத்தில்தான் இந் நோய் வேகமாகப் பரவும். இக் கிருமிகள் ரத்த ஓட்டத்தில் கலந்து மூளையைப் பாதிக்கும்.

மூளைக் காய்ச்சலின் அறிகுறிகள் பயங்கரமான தலைவலி, ஜுரம், வாந்தி; பாதிக்கப்பட்டவரின் நடத்தையில் வினோதமான மாற்றங்கள். உதாரணமாக - வழக்கத்துக்கு அதிகமாகக் கோபப்படுவது, உளறுவது, சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்வது; வலிப்பு ஏற்படுவது, ஒரு பக்கம் கை, கால் விழுந்து விடுவது... மூளையின் எந்தப் பகுதி பாதிக்கப்பட்டுள்ளதோ, அதைப் பொறுத்து அறிகுறிகள் அமையும்.

**கொ**சுக்கள் கிருமிப் பரிமாற்றம் செய்வதனால் மட்டுமின்றி வேறு சில காரணங்களாலும் மூளைக் காய்ச்சல் ஏற்படக் கூடும். மண்டையில் அடிபட்டு, பலமான காயம் ஏற்பட்டாலோ, தண்டுவடத்தில் டி.பி. கண்டு, அதன் வழியே மூளைக்குச் செல்லும் meninges என்ற ஜவ்வு பாதிக்கப்படுவதாலோ மூளைக் காய்ச்சல் வரலாம்.

மூளைக் காய்ச்சலுக்கு மூலகாரணம் என்ன? என்பதைத் தண்டுவடத்திலிருந்து நீர் எடுத்துப் பரிசோதித்துப் பார்த்து நிர்ணயிக்க முடியும். பரிசோதனையின் முடிவுக்கு ஏற்ப சிகிச்சை வேறுபடும்.

**சி**ல பேருக்கு மூளைக் காய்ச்சல் நிரந்தர பாதிப்புகளை விட்டுச் செல்லும். உதாரணமாகக் கை கால் செயலிழந்து போதல். வேறு சிலருக்கு மூளைக் காய்ச்சல் வந்து போனாலும் பாதிப்பு அதிகம் இராமல் போகலாம். அன்றாட உடல் ஆரோக்கியம், நோய் எதிர்ப்பு சக்தி, அவருக்கு டி.பி., நீரிழிவு நோய் போன்றவை ஏற்கெனவே உள்ளனவா என்பன போல் பல விஷயங்களைப் பொறுத்தே பாதிப்பு இருக்கும்.

**சா**தாரண மூளைக் காய்ச்சலைப் பதினைந்து நாட்கள் முதல் ஒரு மாதத்துக்குள் குணப்படுத்தலாம். டி.பி. யுடன் கூடிய மூளைக் காய்ச்சல் குணமாகச் சுமார் ஒன்றரை வருடம் பிடிக்கும். அறிகுறிகள் தோன்றிய உடனேயே டாக்டரிடம் போய், தகுந்த சிகிச்சை செய்து கொள்ள வேண்டும். எக்காரணத்துக்காகவும் சிகிச்சையைப் பாதியில் நிறுத்தி விடக் கூடாது. அவ்வாறு செய்தால் Hydrocephalus என்ற பின்விளைவு ஏற்படும். ஆபத்தில் முடியும்.

- பானுமதி ராமச்சந்திரன்



# ஞாபக சக்தியைப் பெருக்குவது எப்படி?

உங்கள் ஞாபக சக்தியைக் கொஞ்சம் சோதித்துப் பாருங்கள். இந்தப் பட்டியலை ஐந்து நிமிடங்கள் படிக்கலாம். பிறகு கண்ணை மூடிக் கொண்டு, பட்டியலில் கொடுத்துள்ள பொருட்களை வரிசை மாறாமல் நினைவு கூருங்கள் :

| | |
|---|---|
| 1. தரைவிரிப்பு | 11. டைப்ரைட்டர் |
| 2. காகிதம் | 12. ஷூ |
| 3. பாட்டில் | 13. ஒலிபெருக்கி |
| 4. மெத்தை | 14. பேனா |
| 5. மீன் | 15. டீ.வி. |
| 6. நாற்காலி | 16. தட்டு |
| 7. ஜன்னல் | 17. வளையம் |
| 8. டெலிபோன் | 18. கார் |
| 9. சிகரெட் | 19. கூஜா |
| 10. ஆணி | 20. செங்கல் |



...ஐந்தாறு பொருட்களுக்கு மேல் உங்களால் நினைவு வைத்துக் கொள்ள முடியவில்லை அல்லவா...?

இப்போது கண்ணை மூடிக் கொண்டு மனத் திரையில் இப்படி ஒரு கற்பனைக் காட்சியைக் காணுங்கள்.

மெத்தென்ற அழகான தரை விரிப்பு. அதன் மீது நீங்கள் நடக்கிறீர்கள். உங்கள் காலடியில் உள்ள விரிப்பு, திடீரென்று காகிதமாக மாறுகிறது. அதை எடுத்துச் சுருட்டி, ஒரு பாட்டிலில் திணித்து, பாட்டிலைத் தூக்கி எறிகிறீர்கள். பாட்டில் ஒரு மெத்தையில் போய் விழுகிறது. அந்த மெத்தை ஒரு மீனாக மாறுகிறது. அந்த மீன் ஒரு நாற்காலியில் அமர்ந்து உங்களைப் பார்த்துச் சிரிக்கிறது! நாற்காலி ஒரு ஜன்னலுக்கருகே இருக்கிறது. ஜன்னல் மீது ஒரு டெலிபோன் இருக்கிறது. டெலிபோனை எடுத்துப் பேச முற்படுகிறீர்கள். அப்போது ரிசீவரிலிருந்து ஒரு சிகரெட் வெளிப்படுகிறது. சிகரெட்டை வாயில் வைத்துப் புகைக்கப் பார்த்தால் அது நிறைய புகையிலைக்குப் பதில்-ஆணிகள் இருக்கின்றன. ஆணிகளை எடுத்து வெளியே வீசினால் அவை டைப்ரைட்டரில் போய் விழுகின்றன. டைப்ரைட்டரை நெருங்கித் தட்டினால் அதற்குள்ளிருந்து ஒரு பழைய ஷூ வெளிப்படுகிறது! நீங்கள் கையில் எடுத்ததும் அந்த ஷூ ஒரு ஒலிபெருக்கியாக மாறி விடுகிறது. ஒலிபெருக்கிக்குள் 'ஹலோ' என்று கூறப் போக, அது ஒரு பேனாவாக உருமாறுகிறது. இந்த அதிசயப் பேனாவைக் கொண்டு நீங்கள் டீ.வி. திரையில் கூட எழுதலாம். டீ.வி.யின் மேல் ஒரு தட்டு இருக்கிறது. அந்தத் தட்டைக் கையிலெடுத்தால் அதன் நடுப்பகுதி நெகிழ்ந்து விழ,



உங்கள் கையில் டயர் வடிவ வளையம் மிஞ்சுகிறது. அந்த வளையத்தின் வழியே பாய்ந்து வருகிறது ஒரு கார். கார் மீது ஒரு கூஜா இருக்கிறது. கூஜாவைத் திறந்து சரித்தால் அதற்குள்ளிருந்து வெளிப்படுகிறது ஒரு செங்கல்!

— இந்தக் கற்பனைக் காட்சி மனத்திரையில் ஓடி முடிந்த பிறகு கண்களைத் திறவுங்கள். இப்போது பட்டியலின் ஒவ்வொரு பொருளாக வரிசைப்படி நினைவுகூருங்கள். உங்களால் அனேகமாக எல்லாப் பொருட்களையும் நினைவுகூர முடிவதை உணர்வீர்கள்.

— சிறந்த ஞாபகசக்தியின் ரகசியமே கடவுள் நமக்கு அளித்துள்ள எட்டு அறிவுகளையும் நன்றாகப் பயன்படுத்தப் பழகிக் கொள்வதுதான். 'பகுத்தறிவைச் சேர்த்து மனிதனுக்கு ஆறறிவுதானே; ஏழாவது, எட்டாவது அறிவுகள் என்ன?' என்கிறீர்களா...?

ஏழாவது அறிவு : கற்பனை; எட்டாவது அறிவு : நிஜத்தையும் கற்பனையையும் மனத்திரையில் வடிவமைத்து, மனக்கண்ணால் நோக்கும் சக்தி. இந்த இரண்டையும் பயன்படுத்தித்தான் ஆரம்பத்தில் தரப்பட்ட ஒன்றோடு ஒன்று தொடர்பில்லாத பொருள்களின் பட்டியலை நினைவு வைத்துக் கொள்ள முடிகிறது.

மனித மூளையையும் இயல்புகளையும் ஆராய்ந்துள்ள விஞ்ஞானிகள் poor memory மோசமான ஞாபக சக்தி என்பதாக ஒன்று இடையவே கிடையாது என்கிறார்கள். இந்த ஆற்றல் எல்லா மனிதர்களுக்கும் சமமான அளவில் இருக்கிறது. (மூளை வளர்ச்சி குன்றிய நபர்கள் தவிர) இதனைப் பயன்படுத்தும் முறையில் உள்ள மாறுதல்களாலும் குறைபாடுகளாலும்தான் மறதி ஏற்படுகிறது என்பதும் ஆராய்ச்சியாளர்களின் முடிவு.

மனித மூளை ஒரு 'ஸுப்பர் ஸுப்பர்' கம்ப்யூட்டரைப் போன்றது. ஒவ்வொரு வினாடியும் பத்து புதிய செய்திகளை அதனால் கிரஹித்துச் சேமித்துக் கொள்ள முடியும். இப்படியே வாழ்நாள் முழுவதும் சக்தி குன்றாமல் செயல்படும் திறன் படைத்ததுதான் மூளை. எனவே, 'வயதாகி விட்டதால் மறதி வந்துட்டுது' என்று சொல்லப்படுவதை நாம் ஏற்கவே முடியாது. வயதானவர்களுக்குச் சிரமம் தரக் கூடாது; ஓய்வு அளிக்க வேண்டும் என்ற நல்லெண்ணத்தில் சமூகமே அவர்களுடைய நினைவாற்றலை ஒடுக்கிக் கட்டிப் போடுகிறது.

கம்ப்யூட்டருள் நாம் சேமிக்கும் தகவல்களை அது நமக்குக் கேட்ட போதெல்லாம் தருகிறதல்லவா...? அதே போல் மனித மூளையும் தர வல்லதே. ஆனால் தகவலைச் சரியான முறையில் சேமிக்கத் தவறி விட்டு நாம் 'எனக்கு ஞாபக சக்தியே போதாது!' என்று இயற்கை ஆற்றல் மீது பழி போடுகிறோம். உண்மையில், மனிதன் தன் நினைவாற்றலின் ஒரு சதவிகிதத்தை மட்டுமே நடைமுறையில் உபயோகிக்கிறான்!



ஞாபக சக்தியை நன்கு உபயோகித்துப் பயன்பெற முதலில் தேவை positive அணுகுமுறை. 'ஐயோ! நான் மறந்துடுவேன்!' 'மறந்து தொலைக்காதே!' போன்ற வாக்கியப் பிரயோகங்களை முதலில் விட்டொழிக்க வேண்டும்.

பிறகு இதுநாள்வரை எதையெதை மறந்தோம், ஏன் மறந்தோம் என்ற ஆராய்ச்சியில் ஈடுபட வேண்டும். இப்படி ஆராய்ந்து பார்த்தால், மறந்து போவதற்கான மூல காரணங்கள் சிலவற்றை நாம் அடையாளம் காண முடியும் :

●● தகவலை நாம் சரியாக மனத்தில் பதியவைத்துக் கொள்வதில்லை - இதற்குக் காரணம் - அந்தச் சமயத்தில் நமக்கு அத் தகவல் முக்கியமானதாகத் தோன்றியிருக்காது. உதாரணமாக - ஒரு மரியா

னைக்கு 'உங்கள் பெயர் என்ன?' என்று புதிதாய்ச் சந்திக்கும் நபரிடம் கேட்போம். அவரும் சொல்லுவார். மனப்பூர்வமான ஈடுபாடு இல்லாத தால் அந்தப் பெயர் அதோடு மறந்து விடும். பின்னால் அந் நபரைச் சந்தித்தால் தர்மசங்கடம்!



சில சமயங்களில் முக்கியமான தகவல்களை, அவசியமாக நாம் கருதுவனவற்றைக் கேட்கும் போது கூட மனம் திசை திரும்பி விடும். வார்த்தைகள் காதில் விழும். ஆனால் தகவல் மனத்தில் பதியாது; அல்லது அரைகுறையாகப் பதியும்.

மனம் ஒரு காமெராவைப் போன்றது. அதை ஃபோகஸ் செய்து நிறுத்தாவிட்டால் அதில் பதியும் பிம்பங்கள் கலங்கலாகத்தான் இருக்கும். எனவே, நினைவு வைத்துக் கொள்ள விரும்பும் விஷயத்தின்பால் முழுக் கவனம் செலுத்தியே ஆக வேண்டும்.

வருஷத்துக்கு ஒருமுறை செய்யும் தீபாவளி லேகியத்தின் தயாரிப்பு முறையைப் புத்தகத்தைப் பார்த்துச் செய்யும் பெண்கள், அடுத்த ஒரு வருஷத்துக்கு அதைப் பற்றி நினைப்பதே இல்லை. அடுத்த தீபாவளியின் போது மீண்டும் புத்தகம் தேவைப்படுகிறது. சமையல் புத்தகம் கைவசம் இருப்பதால் இவ் விஷயத்தில் பிரச்னை இல்லை. ஆனால் நினைவில் மட்டுமே வைத்துக் கொள்ளக்கூடிய தகவல்களை, சம்பவங்களை, அடிக்கடி எண்ணிப் பார்க்காவிட்டால், அவை அடியோடு மறந்துதான் போகும்.

●● ஓர் அனுபவத்தில் மற்றொரு அனுபவம் தலையிடுவதால் முதல் அனுபவத்தை மறந்து போகிறோம்.

*உதாரணமாக :* மகிழ்ச்சியான நேரத்தில் ஒரு துக்க செய்தி வந்தால், அந்த மகிழ்ச்சி, அதற்கான காரணம் - எல்லாம் மறந்து போகின்றன.

●● நாம் புதிதாக அறியும் தகவல்களை நினைவில் நிறுத்திக் கொள்ள முயல்வதற்கு முன்னரும் பின்னரும் நாம் மனத்தை எதில் செலுத்தினோம் என்பதைப் பொறுத்தும் நினைவாற்றல் பாதிக்கப்படு கிறது.

*உதாரணமாக* - பிரச்னைகள் மிகுந்த இறுக்கமான வீட்டுச் சூழலில் வாழும் பல குழந்தைகளால் பள்ளிப் பாடங்களைச் சரியாக மனத்தில் நிறுத்திக் கொள்ள முடிவதில்லை.

●● ஒரு விஷயத்தை மறக்கக் கூடாது என்ற நமது மன உறுதி ஒருபுறம்; அதை நினைத்துப் பார்க்க விரும்பாத உள்மனம் மறுபுறம் - இவற்றுக்கிடையேயான போராட்டத்தின் விளைவாக மறதி ஏற்படுவ துண்டு.

*உதாரணமாக :* ஒரே நாளில் ஒரு விழாவுக்கு அழைப்பும் பல் டாக்டரிடம் அப்பாயின்ட்மென்டும் கிடைக்கின்றன. பல் டாக்டரிடம் போவது வேதனை தரும் என்பதால் அந்த அனுபவத்தை உள்மனம் மறக்க விரும்புகிறது. விழா அழைப்பு ஞாபகமிருக்கிறது!

நமது மறதி மேற்படி காரணங்களுள் எதனால் விளைந்தது என்று கண்டுபிடித்து விட்டால் காரணத்தைக் களைய விசேஷ முயற்சிகள் எடுக்கலாம்.




மறதிக்கு முதல் காரணமாகச் சொல்லப்பட்டது : மனம் ஒருமுகப் படாமை.

நம் காதில் விழுவனவற்றுள் பத்து சதவிகிதமும் பார்த்துக் கொண்டே கேட்பவற்றுள் நாற்பது சதவிகிதமும் நாம் நேரடியாக ஈடுபடுபவனவற்றுள் எண்பது சதவிகிதமும் நினைவில் நிற்கும் என்பது சில ஆராய்ச்சியாளர்களின் முடிவு.

ஆக நாம் காண்பன, கேட்பனவற்றையும் சீராக நினைவில் வைத்துக் கொள்ள வேண்டுமானால் அவற்றிலும் நமக்கு நேரடியான ஈடுபாடு இருப்பது நல்லது. கட்டுரையின் ஆரம்பத்தில் தந்த பட்டியலில் உள்ள

# புண்ணிய காரியங்களை ஸங்கிராந்தியில் ஏன் அனுஷ்டிக்க வேண்டும்?

மேஷம் முதலிய பன்னிரெண்டு ராசிகளில் கிரமமாக மாதந்தோறும் சஞ்சரிக்கும் ஸூரிய பகவான், ஒரு ராசியிலிருந்து வேறு ராசிக்கு பிரவேசிக்கின்ற சமயம் ஸங்கரமணம் ஸங்கிராந்தி என்று சொல்லப்படுகிறது. அந்தப் புண்ணிய காலங்களில் செய்கிற ஸ்நானம், தானம், ஹவ்யம், கவ்யம், முதலிய புண்ணிய காரியங்களுக்கு ஏழு வருஷம் ஸூரியன் நல்ல பலன்களைக் கொடுக்கிறார். ஆகையால் புண்ணிய காரியங்களை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

தேவலர்: ஸங்கராந்தி சமயம் ஸூக்ஷ்மமானது. நம்மால் அறிய முடியாதது. ஆகையால் ஸ்ங்கரமணத்திற்கு முன்பு முப்பது பின்பு முப்பது நாழிகைகள் புண்ணிய காலமாகும்.

| ராசி | ஸங்கிரமணத்தின் நாமதேயம் | (ப்ருஹஸ்பதி வாக்குப்பலன்) புண்ணிய காலம் | புண்ணிய பலன் |
|---|---|---|---|
| மகரம் | உத்திராயணம் | பின் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| கும்பம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மீனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மேஷம் | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| ரிஷபம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மிதுனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கர்கடகம் | தக்ஷிணாயனம் | முன் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| சிம்மம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கன்னி | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| துலா | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ண்ணியம் |
| விருச்சிகம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| தனுசு | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |

ஸம்க்ஷேப தர்மசாஸ்திரம்

பொருட்களை நாமே கையாள்வதாகக் கற்பனை செய்த போது அவற்றை நினைவில் வைத்துக் கொள்வது எளிதாயிற்று அல்லவா!

மனம் ஒருமுகப்படுதல் என்பது நாம் அறிய விரும்பும் விஷயத்தில் நிலைத்த நீண்ட கவனம் செலுத்துவதால் விளைகிறது. கவனம் சிதறிப் போகாமல் நிலைத்து நிற்பது அவ்விஷயத்தில் நமக்குள்ள ஆர்வத்தைப் பொறுத்தது மட்டுமல்ல; பழக்கத்தையும் பயிற்சியையும் பொறுத்தது. செய்யும் வேலை எதுவானாலும் அதை முழுக் கவனத்துடன் செய்யும் பழக்கத்தைப் பயிற்சி மூலம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். இவ்வாறு கச்சிதமாகச் செய்ய வேண்டும் என்று எண்ணினால் ஆர்வம் உண்டாகி, மனமும் ஒருமுகப்படும்.




ஈடுபாடு இருந்தும் சில விஷயங்களை மறப்பானேன்...? உதாரணமாக, பலர் 'கார்' அல்லது ஸ்கூட்டர் சாவியைத் தேடாமல் ஒருநாள் கூட அலுவலகம் கிளம்புவதில்லை! 'மூக்குக் கண்ணாடியை எங்கே வைத்தேன், என்று வீட்டில் மேலும் கீழும் தேடி அலைவார்கள்....

இத்தகையவர்களிடம் உள்ள குறை மறதி அல்ல .- ஏனென்றால் இதே நபர்களால் 1940இல் நடந்த கிரிக்கெட் மாட்ச் ஸ்கோரையும், அலுவலக வேலைக்கு அவசியமான புள்ளி விவரங்களையும் சகட்டு மேனிக்கு உதிர்க்க முடியும். இவர்களிடம் உள்ள குறை ஆங்கிலத்தில் 'absent mindedness' என்று சொல்லப்படும் பிரக்ஞையின்மைதான்!

ஆனால் இந்தக் குறையை அவர்கள் உணர்ந்து, ஏற்று, தங்களை மாற்றிக் கொள்ள முயலும் வரை இவர்களுக்கு யாராலும் உதவ முடியாது.

இவர்கள் எப்படித் தங்களை மாற்றிக் கொள்ள வேண்டும்... ஆரம்ப கட்டமாக இவர்கள் தாங்கள் செய்வதை உணர்ந்து செய்ய வேண்டும். சாவி வைக்கும் இடத்தையும் சாவியையும் கண்ணால் பார்த்து மனத்தில்

பதித்துக் கொள்ள வேண்டும். 'நான் சாவியை மேஜை மேல் வைக்கிறேன்' என்று ஒருமுறை உரக்க சொல்லிக் கொள்ளலாம். அவ்வாறு செய்யும் போது, செயல், சொல் மற்றும் அதனுடன் சம்பந்தப்படும் பொருள் ஆகிய மூன்றும் ஒன்றோடு ஒன்று தொடர்புபடுத்தப்பட்டு மூளையில் பதிகின்றன.

ஒரு பொருளை ஒரே இடத்தில் எப்போதும் வைப்பது நல்லது. அவ்வாறு வைப்பதற்கும் சரி, சில சமயங்களில் இடம்மாற்றி வைப்பதற்கும் சரி, தகுந்த காரணம் இருக்க வேண்டும். காரணம் நினைவுக்கு வரும் போது வைத்த இடமும் தன்னிச்சையாக நினைவு வரும்.

'பிரக்ஞையின்மை' பெரும்பாலும் படு 'பிஸி'யான நபர்களிடம் காணப்படுகிறது. இவர்கள் கவனம் முழுதும் வேறு விஷயங்களில் இருப்பதால் சராசரி, தினசரி விஷயங்களான கார் சாவி, கண்ணாடி போன்றவற்றின்பால் இவர்கள் கவனமே செலுத்துவதில்லை.

ஆனால் இத்தகைய கவனமின்மையே வழக்கமாகிப் போவதால் நாளாவட்டத்தில் 'பிஸி'யாக இல்லாத சமயத்திலும் இவர்கள் பிரக்ஞையுடன் செயல்படுவதில்லை. சின்னச் சின்ன விஷயங்கள் மறப்பதால் இவர்களுடைய செயல்பாடு தடைப்படுகிறது. அவஸ்தைப்படுகிறார்கள். கொஞ்சம் மனோதிடம் (will power) மட்டும் இருந்தால் இவர்கள் தங்களை முற்றிலுமாக மாற்றிக் கொண்டு விட முடியும்.

***ம***னத்தில் பதிய வைத்த தகவலை உபயோகிக்காமல் துருப்பிடிக்க அனுமதிப்பது மறதிக்கு இரண்டாவது காரணமாகச் சொல்லப்பட்டது.

இந்தப் பிரச்னையை வெல்வதற்கு ஒரு வழி, புதிதாக அறிந்த விஷயத்தை மீண்டும் மீண்டும் எண்ணிப் பார்ப்பது; திரும்பத் திரும்பச் சொல்லிப் பார்ப்பது. இவ்வாறு செய்வதால் புதிய விஷயங்கள் எளிதாகப் புரிவதோடு மனத்திலும் பதிகின்றன என்கின்றனர் ஆராய்ச்சியாளர்கள். திரும்பச் சொல்லிப் பார்ப்பதில் சில விதிகளைக் கடைப்பிடிக்கச் சொல்லி அறிவுறுத்துகிறார்கள் மனோதத்துவ நிபுணர்கள். பரீட்சைக்குப் படிக்கும் மாணவர்களுக்கு இந்த விதிகள் மிகவும் உபயோகமாய் இருக்கும் :

- சொல்லும் விஷயத்தைப் புரிந்து கொண்டு சொல்லுங்கள்.
- ஒரே சமயத்தில் ஏராளமாகப் படிக்காமல் இடைவெளி விட்டு விட்டுச் சிறிது சிறிதாகப் படித்து, மீண்டும் சொல்லிப் பாருங்கள்.
- உங்களுக்கு நீங்களே புதிய விஷயத்தை உரக்கச் சொல்லிக் கொள்ளுங்கள்.
- அந்த விஷயம் மனத்தில் பதிந்து விட்டது என்று உறுதியான பின்னரும் துளியும் கவனம் குறையாமல் மீண்டும் சில முறைகள் சொல்லிப் பாருங்கள்.
- புதிதாக அறிந்த ஒரு விஷயத்தை முழுவதுமாகச் சொல்லிப் பார்க்காமல் பகுதி பகுதியாகப் பிரித்து, நினைத்துப் பார்த்து, உரக்கச் சொல்லுங்கள்.
- என்னால் முடியும் - நினைவிருக்கும். மறக்காது - என்று அடிக்கடி உங்களுக்கு நீங்களே சொல்லிக் கொள்ளுங்கள்.
- வித்தியாசமாக, வேறுபட்டு நிற்கும் விஷயங்களை நினைவில் வைத்துக் கொள்வது எளிது. புத்தகத்திலிருந்து படிக்கையில் முக்கியமான வார்த்தைகளை அடிக்கோடிட்டுக் கொண்டால் அவை தனித்து நிற்கும். மனத்தில் பதியும்.
- ஒரு விஷயத்தை மீண்டும் மீண்டும் நினைத்துப் பார்த்துச் சொல்வதால் அது நமது குறுகிய காலநினைவுப் பெட்டகத்திலிருந்து நீண்ட கால நினைவுப் பெட்டகத்துக்குப் போய்ப் பொருந்திக் கொள்கிறது.



ஓர் அனுபவத்தில் மற்றொன்று தலையிடுவதன் காரணமாக மறதி விளைகிறது என்பது மூன்றாவதாகக் கூறப்பட்ட காரணம். முக்கியமான புதிய விஷயத்தை அறிந்து கொள்ளும் முன்னரும் பின்னரும் மனத்துக்கும் மூளைக்கும் சுமையான விஷயங்களைத் திணிக்காமல் இருப்பது நல்லது.



படிக்கும் மாணவர்கள், மனத்தில் பதிந்த பாடங்களுடன் படுக்கச் சென்று காலையில் எழுந்ததும் மீண்டும் ஒருமுறை அப் பாடங்களை நினைவுகூர்வது மிகவும் நல்லது. இவ்வாறு செய்வதால் வேறு அனுபவங்களின் குறுக்கீடு இன்றிப் பாடம் மனத்தில் பதிந்து ஸ்திரப்பட்டுப் போகிறது.

புதிதாகக் கற்கும் விஷயங்களை வேண்டுமானால் இவ்வாறு பிற அனுபவங்களின் தாக்கத்திலிருந்து பாதுகாக்க முடியும்.

ஆனால் ஏற்கெனவே அறிந்த பல விஷயங்கள் மறந்து போவதற்கும் மனத்தை அழுத்தும் அனுபவங்கள் காரணமாகின்றன. உதாரணமாக, அந்தப் பெயர் நாக்கு நுனியில் இருக்கு, வர மாட்டேன் என்கிறது...' என்று நாம் எல்லோருமே ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் அவஸ்தைப் பட்டிருக்கிறோம். இத்தகைய அழுத்தத்தை வெல்ல வேண்டுமானால் மனத்தை அமைதியாக வைத்துக் கொள்ள வேண்டும். பல சந்தர்ப்பங்களில், ஒரு நல்ல தூக்கம் போட்டு எழுந்தால் இறுக்கம் தளர்ந்து மறந்த விஷயம் நினைவுக்கு வந்து விடும். மறந்து போன விஷயத்துடன் தொடர்பு உள்ள வேறு விஷயங்களை எண்ணிப் பார்ப்பதன் மூலமும் ஒரு தீர்வு பிறக்கலாம். ஒரு விஷயத்தை நினைவில் அமர்த்திக் கொள்ளும்போதே, அதனை வேறொன்றுடன் தொடர்புபடுத்தி வைத்துக் கொள்வது பேருதவி. (கட்டுரை ஆரம்பத்தில் உள்ள பயிற்சி). இவ்வாறு தொடர்புபடுத்தும் விஷயம் ஒத்ததாக இருக்கலாம் :

உதாரணமாக சந்திரா என்ற பெயரை நினைவு வைத்துக் கொள்ள வேண்டும்.

சந்திரா - சந்திரன் - Moon என்ற ஆங்கிலச் சொல் என ஒத்த விஷயங்களை எண்ணிப் பார்த்துக் கொள்ளலாம்.

அல்லது

சந்திரா - சந்திரன் - சூரியன் என்று முற்றிலும் வேறுபட்டதை எண்ணிப் பார்க்கலாம்.

அல்லது

இரவு, நிலவு, சந்திரன் - சந்திரா எனச் சங்கிலித் தொடரான அம்சங்களை நினைத்துப் பார்த்து மனத்தில் இறுத்திக் கொள்ளலாம்.

இவற்றுள் ஏதேனும் ஒன்றைக் கடைப்பிடியுங்கள்.

அவரவருக்குத் தைத்த ஆடை போல அவரவருக்கு மட்டுமே பொருந்தக்கூடிய வழிமுறைகள் இருக்கின்றன. அவற்றைச் சற்றுப் பொறுமையுடனும் விருப்பமுடனும் ஆராய்ந்து தேர்வு செய்து ஞாபக சக்தியை வளர்த்துக் கொண்டால் வாழ்க்கை எளிதாகவும் நிறைவாகவும் இருக்கும்.

கடைசியாக ஒன்று : ஞாபக மறதி ஜோக்குகளை நம்பாதீர்கள். அவை சிரிக்க மட்டுமே. ஞாபக சக்தியை வளர்த்துக் கொள்ள உங்களால் முடியும் - நம்புங்கள். நம்பிக்கையே வெற்றியின் அஸ்திவாரம்.

**இத்துறையில் நிபுணர்களான நாராயணன் - சுமதி தம்பதி கூறியவற்றின் தொகுப்பு.**

கட்டுரை வடிவம் : **சீதா ரவி**

படம் : **ரமணன்**



◄ சுமதி - நாராயணன்

# ஸ்ரீகாந்த்

சோம. வள்ளியப்பன்



இன்று லீவு போட்டாச்சு. இந்தியாவுக்கும் ஆஸ்திரேலியாவுக்கும் இடையே ஒரு நாள் கிரிக்கெட் மாட்ச். ஸ்ரீகாந்த் வேறு ஆடறார்.

செல்லையாவுக்குக் காலையில் எழுந்திருக்கையிலேயே அந்த பரபரப்பு மனத்தில் இருந்தது. ஸ்ரீகாந்த் என்ன மாதிரி 'பாட்ஸ்மன்'. இம்ரான்கான் ஒருமுறை ஸ்ரீகாந்தைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறார். எந்த பீல்டிங் அமைப்பும் ஸ்ரீகாந்த் ஆட்டத்தைக் கட்டுப்படுத்த முடியாது என்றல்லவா?

ஸ்ரீகாந்த் ஆட்டத்தைப் பார்க்க ஆஸ்திரேலியாவில் போன முறை முன்னூறு நானூறு கிலோமீட்டர் தூரம் பயணம் செய்து வந்தார்களாம். 'டாஷிங் ஓப்பனர்' என்று எவ்வளவு பாராட்டு!

இரண்டு மாட்சுகளுக்கு முன்புதான் நீண்ட இடைவெளிக்குப்பின் மீண்டும் விளையாடத் தேர்வு செய்தார்கள். ஆனால் என்னவோ தெரியவில்லை, ஆஸ்திரேலிய பிட்சுகள் காரணமோ என்னவோ ஸ்ரீகாந்த் சரியாக ஆடவில்லை.

சினிமா உலகம் போல கிரிக்கெட் உலகமும் சாதனைகளைச் சீக்கிரம் மறந்து விட்டுப் புதியவர்களைக் கொண்டாடுகிறதே என்று செல்லையா வருத்தப்பட்டான்.

இந்த மாட்சிலும் சரியாக ஆடா விட்டால் டீமிலிருந்து எடுத்து விடுவார்கள். ஸ்ரீகாந்த் விளையாடாத போது இந்தியா தோற்றால் 'நல்லா வேணும்' என்றுதான் செல்லையாவுக்கு நினைக்கத் தோன்றும்.

''...சீத்தா...... கரெக்டா பதினோறுமணிக்கு மாட்ச். ஆரம்பித்துவிடும். அதுக்கப்புறம் என்னைக் கூப்பிடக் கூடாது. மாட்ச் முடியுற வரைக்கும் ஏதும் செய்ய மாட்டேன். கடைக்குப் போறது....... அது இது எல்லாம் இப்பவே சொல்லிடு.... ஆமாம்.''

ஸ்ரீகாந்த் ஆட்டத்தைப் பார்க்க வேண்டும் என்பதற்காகவே இன்று லீவு எடுத்துக் கொண்டு வீட்டிலிருந்தான்.

சீதாவுக்குத் தெரியும். மாட்ச் ஆரம்பித்த பிறகு டீவியை விட்டு அசைய மாட்டானென்று.

''இன்று வெள்ளிக்கிழமை, நான் கோவிலுக்குப் போகணும். சைக்கிள் பஞ்சராக இருக்கு. அதை ஓட்டிக்கிட்டு வந்திடுங்க. அப்புறம்......''



மாட்ச் ஆரம்பமாகும் வரை என்ன வேண்டுமானாலும் செய்வாரென்று தெரியுமாதலால் விடுவிடுவென்று அடுக்கிக் கொண்டே போனாள்.

அடுத்த இரண்டு மணிநேரத்தில் செல்லையா பரபரவென்று வெளியில் போவதும் வருவதுமாய் எல்லாவற்றையும் முடித்து விட்டான்.

மணி பத்தேமுக்காலாகியது. மாட்ச் ஆரம்பிக்க இன்னும் கால்மணிநேரம் இருந்தது. சீதாவும் அவர்கள் பெரிய பெண்ணை ஸ்கூலுக்கு அனுப்பிவிட்டு சின்னவன் மகேஷைக் கூட்டிக்கொண்டு கோவிலுக்குப் போய்விட்டாள். தொந்திரவு ஏதுமில்லை.

சின்னவன் மகேஷ் மீது செல்லையாவுக்குக் கொள்ளைப் பிரியம். அவனுக்

# மீண்டும் ஆடுகிறார்....

## அமெரிக்காவில்...

❑ வி. ஸி. ஆர். திருட்டுப் போகாமல் பாதுகாக்க ஒரு புதிய கண்டுபிடிப்பு. காஸெட் டேப் வடிவத்திலேயே அமைந்துள்ள அந்தச் சாதனத்தை வி. ஸி. ஆருக்குள் நுழைத்துவிட வேண்டும். இந்த காஸெட் உள்ளே இருக்கும் போது யாரேனும் வி. ஸி. ஆரைத் தொட்டு நகர்த்தினால் சைரன் ஒலிக்க ஆரம்பித்துவிடும். மின் இணைப்பைத் துண்டித்தாலும் இந்தச் சாதனம் இயங்கும்.

நன்றி : நியூஸ்வீக்

கும் அம்மாவை விட அப்பாவிடம்தான் ஒட்டுதல் அதிகம். ''டாச்சு... டாச்சு....'' என்றுதான் அப்பாவைக் கூப்பிடுவான்.

டீவியை 'ஆன்' பண்ணிவிட்டு நாற்காலியை முருகர் படம் மாட்டியிருக்கும் சுவருக்கு அருகில் போட்டுக் கொண்டு அமர்ந்தான் செல்லையா.

நீலநிற உடைகளில்..... ஆங்.... இதோ ஸ்ரீகாந்த். சரி, இந்தியாதான் முதலில் பாட்டிங். செல்லையாவை அறியாமல் அவன் முகம் முருகர் படத்தைப் பார்த்துத் திரும்பியது. ஸ்ரீகாந்த் இன்று ஒரு அம்பது ரன்னாவது எடுக்க வேண்டுமென்ற படபடப்பு ஸ்ரீகாந்த்தைவிட செல்லையாவுக்கு அதிகமிருந்தது போலிருந்தது.

ஆஸ்திரேலிய பந்து வீச்சாளர்கள் பந்தை விடாமல் தேய்த்து, தேய்த்து மெருகேற்றி வீசிக் கொண்டிருந்தார்கள். ஆனால் இன்று ஸ்ரீகாந்தின் ஆட்டத்தில் ஒரு தன்னம்பிக்கை தெரிந்தது.

ஐந்து, ஆறாவது ஓவர்களில் ஸ்ரீகாந்த் தன் வழக்கமான 'ஸ்டைலுக்கு' வந்து விட்டது போலிருந்தது.

ஸ்ரீகாந்த் ஸ்கோர் இருபது. இருந்த இடத்தைவிட்டு செல்லையா அசையவில்லை. ஸ்ரீகாந்த் ஒவ்வொருமுறை மட்டை பிடித்துப் பந்தை எதிர் நோக்கும் பொழுதும் செல்லையா தவறாது, தன்னையறியாது முருகர் படத்தைத் திரும்பிப் பார்த்தான்.

ஸ்ரீகாந்த் ஒரு பந்தை ஓங்கி அடித்தார். அது மேலெழும்பி வானத்தில் பறந்த பொழுது அது பிடிக்கப்பட்டு ஸ்ரீகாந்த் அவுட்டோ என்ற படபடப்பு செல்லையாவைத் தாக்கி, விரல் நகங்களை வாயில் இணைத்துக் கடித்துக் கொண்டிருந்தான். வாவ்.... அது ஒரு ஸிக்ஸர்... செல்லையாவுக்கு மீண்டும் மூச்சு வந்தது.

அடுத்து, அடுத்து விளாசித்தள்ளி ஆஸ்திரேலிய வீரர்களின் பந்துவீச்சைக் கேலி பண்ணிக் கொண்டிருந்த ஸ்ரீகாந்த் ஒரு அடி அடித்தவுடன் ''பெருமானே'' என்பது போல சட்டைக்குள்ளிருக்கும் டாலரை தொட்டுக் கொண்டும், சூரியனைப் பார்த்துக் கொண்டும் இருந்தது தெரிந்தது.

டிங்..... டாங். வாசல் மணி அழைத்தது. உடன் ''டாச்சு.....'' என்ற செல்லையாவின் செல்லமகனின் அழைப்பும் காதில் விழுந்தது. வந்துவிட்டார்கள். இனி ஒழுங்காய்ப் பார்க்க விடமாட்டார்கள் என்று சலித்துக் கொண்டே வாசல் கதவைத் திறந்தான்.

சீதாவும், மகன் மகேஷும்தான். என்ன, ஏது என்றுகூடக் கேட்காது திரும்பி வந்து 'டக்'கென்று அதே நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு டீவியை உற்றுக் கவனித்தான்.

உள்ளே வந்த சீதா, டீவி இருந்த மேஜைமேல் கோவில் அர்ச்சனைக் கூடையை வைத்துவிட்டு மகனைக் கீழே இறக்கி.....

''ஏய் இங்க ஒருத்தன் உட்கார்ந்து டீவி பார்க்கறது கண்ணுக்குத் தெரியலையா, குறுக்க வந்து நிக்கிறா....'' கடித்துத் துப்புவது போல் கத்தினான்.

''ஏன், சேரை நகர்த்திப் போட்டுக் கிட்டு உங்க மாட்சை விடாமல் பார்க்கறது. அர்ச்சனைக் கூடையை மேசை மேல வைக்காம வேற எங்க வைக்கணுமாம்?''

இறக்கி விடப்பட்ட மகேஷ் ''டாச்சு.... டாச்சு....'' என்று கொஞ்சிக் கொண்டே அப்பாவின் மடிக்குத் தடுமாறி ஏறி விட்டான்.

சீதா சொல்லிக் கொண்டே நகர்வதற்குள், 'த பால் இஸ்.... அப் இன் த ஏர் அண்டு ஹி இஸ் கோயிங் டுபி அவுட்.....'' என்று வர்ணனையாளர் கத்த, மகனைக் கீழே உதறிவிட்டு எழுந்து ஓடிவந்து சீதாவை நெட்டித் தள்ளினான் செல்லையா.

''ஒரு மாட்ச் பார்க்க விடுவீங்களா என்னை?... போச்சு போச்சு ஸ்ரீகாந்த் அவுட்டா?''

டீவி அருகில் எழுந்து நின்று பார்த்தான். ஒரு கையை மற்றொரு கைக் கக்கத்தில் வைத்து 'வெடுக்'கென்று கையுறைகளை உருவிவிட்டு, தப்பு மட்டையின் மேல்தான் என்பதுபோல மட்டையைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டே வந்து கொண்டிருந்தது: ரவிசாஸ்திரி. அப்பாடா! அவுட்டானது அப்ப ஸ்ரீகாந்த் இல்லை. இருந்தாலும் ஒரு ஆள் அவுட் டாச்சே!

''இவ்வளவு நேரம் நல்லா ஆடிக்கிட்டு இருந்தானுக. மகேஷ் வந்து என் மடியில் ஏறினான் ஒரு ஆளு அவுட்'' செல்லையா அழுது கொண்டிருந்த மகேஷை முறைத்தான்.

அடுத்து வந்த சஞ்சய் மஞ்ரேக்கர் ஸ்ரீகாந்துடன் ஜோடி சேர்ந்து ஆட ஆரம்

# ஒரு புறம் லாபம். இன்னொரு புறம் நன்மை
# இருவகை ஆதாயம் தருகிறது - யூலிப்.

*உங்களுக்குக் கிடைக்கிறது*
*குறைந்த செலவில்*
*அதிக இன்சூரன்ஸ்*
*பாதுகாப்பு*



*உங்களை*
*கவர்ந்திழுக்கும்*
*அதிக லாபம்*
*பெறும் அனுகூலம்.*

யூனிட் இணைந்த இன்சூரன்ஸ் திட்டத்தில் முதலீடு செய்யும்போது உங்களுக்குக் குறைந்த ப்ரீமியத்தில் ஆயுள் பாதுகாப்பு கிடைக்கிறது. அதுவும் மருத்துவ பரீட்சை இல்லாமலேயே. தவிர ரூ. 15,000 வரை விபத்து காப்பும் உண்டு இலவசமாகவே.

இவை மட்டுமல்ல. யூலிப்பின் வளரும் டிவிடெண்ட், இதனை ஒரு கவர்ச்சியான திட்டமாக்குகிறது. ஒவ்வொரு வருடமும் வளரும் டிவிடெண்ட் திரும்ப முதலீடு செய்யப்படுகிறது. கடந்த வருடத்திய டிவிடெண்ட் 14.5% தவிர திட்டம் முடிவடையும்போது போனஸும் அளிக்கப்படும். 10 வருட திட்டத்தில் 5% மற்றும் 15 வருட திட்டத்தில் 7.5% போனஸ்.

**வரிக்கழிப்பு விவரங்கள் என்ன?**

வருமான வரித்திட்டம் செக்ஷன் 88ன் கீழ் யூலிப்பில் செய்யப்படும் முதலீடு வருமான வரி கழிப்பிற்கு உட்படுகிறது. இதில் கிடைக்கும் டிவிடெண்டிற்கும் செக்ஷன் 80L-ன் கீழ் ரூ. 13,000 வரை கழிப்பு உண்டு.

**திட்ட விவரங்கள்:**

வயது: இத்திட்டத்தில் சேர குறைந்தபட்ச வயது இப்பொழுது 12. 10 வருட திட்டத்திற்கு அதிகபட்ச வயது 55½ மற்றும் 15 வருட திட்டத்திற்கு 50½ வயது.

லட்சியத் தொகை: ரூ. 6,000த்திலிருந்து ரூ. 60,000 வரை. கால அவதி: உங்களுக்கு விருப்பமானதை தேர்ந்தெடுக்கலாம். 10-வருட மற்றும் 15-வருட திட்டம்.

இலவச புத்தகத்திற்கு ஏதேனும் யூனிட் ட்ரஸ்ட் காரியாலயம், முக்கிய பிரதிநிதி, ஏஜெண்ட் அல்லது ஸ்பொன்ஸர்ஸ் ஸ்டோரை அணுகவும்.



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**
ஒரு கோடிக்கும் அதிகமான யூனிட்தாரர்களின் சேவையில்.

## யூனிட் இணைந்த இன்சூரன்ஸ் திட்டத்தில் முதலீடு செய்யுங்கள்

எல்லா செக்யூரிடி முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க் கொண்டவையாகும்
முதலீடு செய்வதற்கு முன் முதலீட்டு ஆலோசகர் அல்லது முகவரை கலந்தாலோசிக்கவும்.

---

**மண்டல அலுவலகம்: 45, செகண்ட் லைன் பீச், சென்னை-600 001. போன்: 587433, 562257. கிளை அலுவலகம்: □ திருச்சி: 104, சாலை ரோடு, உறையூர், திருச்சிராப்பள்ளி 620 003. போன்: 32837.**

**தமிழ்நாட்டில் எங்கள் முக்கிய பிரதிநிதிகள்: □ அண்ணா மாவட்டம் ● எஸ். ஜெயசந்திரன், திண்டுக்கல், போன்: 3535. □ இராமநாதபுரம் ● ஏ. பாலகிருஷ்ணன், 45, வடக்கு ரத வீதி, இராமநாதபுரம் 623 501 □ கன்னியாகுமரி ● எஸ். சுபாஷ் சந்திர போஸ், நாகர்கோவில், போன்: 3474 □ தஞ்சாவூர் ● கே. முத்துசாமி, போன்: 20374 □ தருமபுரி ● எஸ்.ஏ. மாதய்யன், போன்: 6152 □ மதுரை ● எம். இராமமூர்த்தி, போன்: 43179 □ வஉசி மாவட்டம் ● கே. இராமமூர்த்தி, தூத்துக்குடி, போன்: 21311 □ வட ஆற்காடு ● பி. நாராயணன், வேலூர், போன்: 21575. □ காமராஜர் மாவட்டம் ● ஆர். வெங்கடேசுவரன், ராஜபாளையம், போன்: 22433, 21360, 21771. □ திருநெல்வேலி ● பி. வெங்கட்ராமன், போன்: 26314 □ நீலகிரி மாவட்டம் ● எம். மாதவன் நம்பியார், குன்னூர், போன்: 21037 □ தென் ஆற்காடு ● எஸ். பாலகிருஷ்ணன், கடலூர், போன்: 377, 46 □ பெரியார் மாவட்டம் ● கே. ஜோதி ராமலிங்கம், ஈரோடு, போன்: 71785, 74785 □ சேலம் ● என்.கே. இங்கர்சால், போன்: 66414, 51520 □ பொன் முத்துராமலிங்க மாவட்டம் ● ஆர். இராமசாமி, காரைக்குடி, போன்: 2277 □ கோயமுத்தூர் ● ஏ. தனபால், போன்: 26313.**



''எது சொன்னாலும் காதுல போட்டுக்க மாட்டேங்கறேன்னு வீட்டுக்காரிகிட்ட புகார் சொன்னது தப்பாப் போச்சு....''

''என்ன சொன்னா?''

''ஹியரிங் எய்டு சேர்த்துப் புது ஃபாஷன் தோடு வந்துருக்காம்,வாங்கித் தரச் சொல்லுறா!''

– எஸ். கோவிந்தன்

---

பித்து விட்டிருந்தார். ஸ்ரீகாந்த் பந்தை அடிக்க மட்டையை ஓங்க, அது பந்தில் படவில்லை. பந்து காலில் பட்டது. ஸ்ரீகாந்த் அவுட் என்று ஆஸ்திரேலிய வீரர்கள் கத்தினார்கள். ஏதும் முடிவு சொல்லாது, நடுவர் நான்கு வினாடிகள் விட்டு, பின்பு 'அவுட் இல்லை' என்று சொல்வதற்குள் செல்லையாவுக்கு மூஞ்சி செத்துவிட்டது.

''ஸ்ரீகாந்த் ஆடி முடிக்கிறதுக்குள்ள உங்களுக்கு ரத்தக் கொதிப்பு வந்திடப் போகுது..... சரி ஏங்க காப்பி போடவா...?'' கரிசனமாய்க் கேட்டாள் சீதா.

''காப்பியும் வேணாம் ஒண்ணும் வேணாம். உன் பிள்ளையை ஒப்புக் கொள்ளு போதும்.''

அப்பா காலுக்குப் பக்கத்தில் தரையில் அமர்ந்து, சிறுநீர் கழித்து அதில் அன்றையத் தபாலில் வந்திருந்த போஸ்டு கார்டை நனைத்து மகேஷ் விளையாடிக் கொண்டிருந்தான்.

ஸ்ரீகாந்த் நாற்பத்தி எட்டு ரன்கள். ஆவி பறக்கும் காப்பியைக் கொண்டு வந்து நீட்டிய சீதாவைத் திரும்பிக் கூட பார்க்காது கையை மட்டும் நீட்டினான்.

''அப்படி என்ன ஒரு நிமிஷத்தில் கெட்டுடப் போவுது..... காப்பியைக் கூட குடிக்காம.....'' என்று சொல்லிக் கொண்டே விடுவிடுவென்று போய் டீவியை 'ஆப்' செய்துவிட்டாள்.

''இந்த விளையாட்டெல்லாம் வச்சுக்காதே ஆமாம்'' என்று அவளை நெட்டி ஒரு தள்ளு தள்ளிவிட்டான். சீதா கையிலிருந்த காப்பி மொத்தமும் தரையில் கொட்டியது.

டீவியை 'ஆன்' பண்ணிவிட்டு தன் இடத்துக்குப் போக நகர்ந்த செல்லையாவின் காதில் ''அண்ட் தட்ஸ் த பிப்டி ஆப் ஸ்ரீகாந்த்....'' என்ற வார்த்தைகள் தேனாய்ப் பாய்ந்தன.

'ஸ்ரீகாந்த் அவ்வளவுதான்... இனி பழைய மாதிரி விளையாட முடியாது' என்றெல்லாம் கேலி பேசினார்களே இப்ப என்ன ஆச்சு? என்று செல்லையாவின் மனசு கேள்வி கேட்டு சந்தோஷப்பட்டுக் கொண்டது.

'கொழ கொழ' வென்று சீதாவின் அன்பின் கெட்டியை வெளிபடுத்திக் கொண்டு தரையில் கொட்டிக் கிடந்த காப்பிக்கு நகர்ந்து, நான் இதைத் 'தப்படிக்க' அனுமதி உண்டா என்பதுபோல சந்தேகமாகத் தந்தையையும் தாயையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டே மெல்ல நெருங்கினான் மகேஷ்.

''அப்பா.... தம்பி... நம்மகிட்ட வரா தப்பா சாமி, ஏதோ ஸ்ரீகாந்த் ஆடிக்கிட்டிருக்கார் அதையும் கெடுத்திடாதப்பா'' என்று கையெடுத்துக் கும்பிட்டுக் கொண்டே நகர்ந்து நகர்ந்து மகன் மகேஷை விட்டு விலகினான் செல்லையா.

''பிள்ளைக்குன்னு வச்சிருந்த பால்ல தண்ணி கூட ஊத்தாம உங்களுக்குக் காப்பி போட்டுக் குடுத்தா கொட்டி விட்டு, பிள்ளையையும் விரட்டுறீங்களே நான் காப்பியைத் துடைக்கணும், அவன் அதில புரண்டுடாம தூக்கி வைச்சுக்கிட்டே பாருங்க உங்க பாழாப்போன கிரிக்கெட்ட....'' பொரிந்தாள் சீதா.

தான் வேண்டாமென்று சொல்லியும் பிரியமாய் அவள் போட்டுக் கொண்டு வந்த காப்பியை தான் கொட்டி விட்ட குற்ற உணர்வு காரணமாய் மகனைத் தூக்கிப் பட்டும் படாமலும் மடியில் வைத்துக் கொண்டு டீவி பார்க்க ஆரம்பித்தான்.

அடுத்து பந்து வீச வந்தவர் ஒரு சுழற்பந்து வீச்சாளர். ஐம்பதுக்கு மேல் அடித்துவிட்ட ஸ்ரீகாந்துக்குச் சுழற்பந்தெல்லாம் அல்வா சாப்பிடறது மாதிரி.

மெதுவாக வீசப்பட்ட அடுத்த பந்தை அடித்து விளாச, துள்ளிக் குதித்து மட்டையைச் சுழற்ற அது மட்டையில் படாது சுழன்று ஸ்டெம்பில் பட்டு - ஸ்ரீகாந்த் 'அவுட்'.

''அப்பா... டாச்சு....'' என்று அழைத்து, செல்லையாவின் முகவாய்க் கட்டையைப் பிஞ்சுக் கைகளால் திருப்பிய குழந்தை மகேஷைத் தூக்கிக் கீழே தரையில் 'தொப்'பென்று உட்கார வைத்துவிட்டு ''இந்தச் சனியனை ஏன் என் மடியில உட்காரச் சொன்ன.... ஸ்ரீகாந்த்தும் அவுட்டாயிட்டான்'' என்று கத்தினான் செல்லையா.

''வீல்'' என்று கத்திக் கொண்டே அதிர்ச்சியும் வருத்தமுமாய்க் குழந்தை மகேஷ் அம்மாவிடம் ஓடினான்.

அவசரப்பட்டிருக்கக் கூடாது என்பது போல தலையைப் பக்கவாட்டில் மீண்டும் மீண்டும் ஆட்டிக் கொண்டே ஸ்ரீகாந்த் திரும்பிப் பெவிலியனுக்கு வந்து கொண்டிருந்தது டீவியில் ஓடிக் கொண்டிருந்தது.

# ஃபாஷன் பக்கம்

பம்பாயின் 'படா படா' பணக்காரர்கள் வாழும் ப்ரீச் காண்டி பகுதியில் ஒரு கடை - இங்கு சில வாரங் களுக்குள் விற்றுப் போகாத பொருள்களைக் கடையில் வைத் திருப்பதேயில்லை. காரணம் குறிப்பிட்ட ஆடையோ ஆபரணமோ ஒரு சில மாதங் களுக்குத்தான் ஃபாஷனில் இருக்கும் என்பதே.

''இந்த வேகமும் மோகமும் இன்னும் சென்னை மாநகரத்தை அந்த அளவுக்கு ஆட்டிப் படைக்கவில்லை'' என்கிறார் ரெடிமேட் துணிகள் கடை வைத்துள்ள ஒருவர்.

அதற்காகச் சென்னைப் பெண்க ளுக்கு ஃபாஷன் பிரக்ஞை இல்லாமலும் போய் விடவில்லை. சில வருடங்களா கவே எல்லா வயதினருக்குமான உடை யாக அங்கீகாரம் பெற்றுவிட்ட சல்வார் கமீ ஸில் இப்போது 'காளி ஸ்டைல்' லேட் டஸ்ட் ஃபாஷன்.

படத்தில் நித்யா அணிந்துள்ள அந்தி வான இளஞ்சிவப்பு நிற சல்வார் கமீஸ், காளி ஸ்டைலில் தைக்கப்பட்டுள்ளது - அதாவது கமீஸ் எனப்படும் மேல் சட்டை இடுப்புப் பகுதியிலிருந்து மெள்ள அகன்று கீழே அழகாக விரிந்து கொடுக்கும். பிரிண்டட் பருத்தியில் எளிமையான அழகு தரும். விலை ரூ. 250/-

ஆர்த்தி அணிந்துள்ளது ஃப்ராக் பாணி சல்வார் கமீஸ். இதன் மேல் சட்டை யின் பக்கவாட்டில் சிறு விசிறி மடிப்புகள். குஜராத் பாணியில் எம்ப்ராய்டரி செய்யப் பட்ட பச்சை யோக்; பச்சை சல்வார்; சிஃபானில் பச்சை துப்பட்டா என்று கண் ணுக்குக் குளிர்ச்சியான நிறச் சேர்க்கை. இதுவும் பருத்தியில் ஆனது - சற்றே கன மான பருத்தி என்பதாலும் வேலைப்பாடு அதிகம் என்பதாலும் கூடுதல் விலை ரூ. 490/-

- கல்பனா

வண்ணப்படங்கள் : யோகா

உடைகள் உதவி : 'பெஹ்னாவ்'



# சிவகாமியின் சபதம்

## முன் கதைச் சுருக்கம் :

காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு அரசாண்ட மகேந்திர பல்லவர் பல்வேறு கலைகளில் ஆர்வம் கொண்டவராக விளங்கி, அதனால் நாட்டின் பாதுகாப்பைக் கவனியாமல் இருந்தார். இதைத் தெரிந்து கொண்டு மாபெரும் சேனையுடன் படை யெடுத்து வந்தான் சளுக்க சாம்ராஜ்யத்தின் சக்கர வர்த்தி வாதாபி புலிகேசி. அவன் வழியில் எங்கும் தங்காமல் நேரே வந்திருந்தால், காஞ்சிக் கோட்டை மிக எளிதாக அவன் வசப்பட்டிருக்கும். அதைத்தான் புலி கேசியின் ஒற்றனும் புத்த பிக்ஷுவுமான நாகநந்தி விரும்பி, செய்தியும் அனுப்பினார்.

ஆனால், நாகநந்தியின் சூழ்ச்சிகளுக்கு எதிர் சூழ்ச்சிகள் பல செய்து, வடபெண்ணைக் கரையி லேயே புலிகேசியைப் பல காலம் தாமதிக்கச் செய்தார் மகேந்திரர். இதற்கிடையில் தமது மகன் மாமல்ல நரசிம்ம பல்லவனையும் தளபதி பரஞ்சோதியையும் ஊக்குவித்துக் காஞ்சிக் கோட்டையைப் பலப்படுத்தி னார்.

வீர மாமல்ல நரசிம்மனுக்கும், சிற்பி மகளும் ஆடலரசியுமான சிவகாமிக்கும் இடையில் காதல் மலர்ந்து, நாளுக்கு நாள் வலுப்பெற்று அசைக்க முடி யாததாயிற்று.

இதே நேரத்தில் நாகநந்தி பிக்ஷு சிவகாமியின் கலைத்திறன் மீது மோகம் கொண்டவராக, மாமல் லனைக் கொன்று விடவும் முயற்சி செய்தார். மண்டபப்பட்டு என்ற கிராமத்தில் நடந்த அந்த முயற்சி மகேந்திர பல்லவரின் ஒற்றர்களின் திறமை காரணமாக வும் தெய்வ அருளாலும் தோல்வி அடைந்தது. மகேந்திர பல்லவர் 'நாட்டின் எதிர்காலத்தை உத்தேசித்து, சிவகாமி தன் காதலைத் தியாகம் செய்து மாமல்லனை விட்டுக் கொடுக்க வேண்டும்' என்று கோரினார். சிவகாமி உறுதியாக இருக்க, மகேந்திரர் வெட்கத்தோடும் வேதனையோடும் திரும்பினார்.

வடபெண்ணைக் கரையிலிருந்து பின்வாங்கிய பல்லவ சேனை, காஞ்சிக் கோட்டைக்குள் புக, காஞ்சி முற்றுகை தொடங்கியது. அதே சமயம் இதுநாள்வரை தமது ராஜதந்திரத்தின் ஓர் அம்சமாக வெளியே உலவ விட்டிருந்த நாகநந்தியைக் கைது செய்து சிறையில் அடைத்தார் மகேந்திரர்.

பல காலம் முற்றுகை நடத்தியும் புலிகேசியால் காஞ்சிக் கோட்டையைப் பிடிக்க முடியவில்லை. இதற் கிடையில் அவனது சேனையும் போதிய உணவின்றிச் சோர்வடையவே சமாதானத் தூது அனுப்பினான். அவனை நம்பி, கோட்டைக்குள் வரவேற்று, ராஜோப சாரம் செய்தார் மகேந்திரர். புலிகேசிக்கு முன் ராஜ சபையில் நடனமாட சிவகாமியைத் தருவித்தார்.

சிவகாமியின் அழகும், அவளுக்கும் அவள் தகப்ப னார் ஆயனச் சிற்பிக்கும் காண்பிக்கப்படும் மரியாதை யும் புலிகேசியைப் பிரமிக்க வைத்தன. மகேந்திர பல்லவர் ஒரு பலவீனமான கணத்தில் புலிகேசியிடம் தன் ஒற்றாடல்களைப் பற்றியெல்லாம் கூற, தான் இவ்வளவு காலம் ஏமாந்ததை எண்ணித் தீராத ஆத்திரம் கொண்டான் சளுக்க மன்னன். நாகநந்தி யாரென்று தெரிந்தும் அவரைச் சிறை வைத்திருந்த மகேந்திரரின் துணிச்சல் புலிகேசியை மேலும் ஆத்திரப்படுத்தியது.

காஞ்சியிலிருந்து விடைபெற்று வாதாபி திரும்பும் நேரத்தில், யாரும் எதிர்பாராத விதமாக, பல்லவ கலைச் செல்வங்களையெல்லாம் அழிக்கும்படியும் சிற்பிகளை அங்கஹீனப்படுத்தும்படியும் பெண்களைச் சிறைப் பிடிக்கும்படியும் தன் படைகளுக்குக் கட்டளை யிட்டான் சளுக்கன்.

புலிகேசிக்கும் நாகநந்திக்கும் இடையே உருவ ஒற்றுமை இருப்பதை உணர்ந்த மகேந்திரர் இத் தரு ணத்தில் நாகநந்தியை விடுவித்தார். புலிகேசியுடை யதைப் போன்ற ஆடை ஆபரணங்களை அவருக்குக் கொடுத்தார். காஞ்சிக் கோட்டையின் பாதுகாப்பி லிருந்து தப்பித்து வெளியே வந்திருந்த ஆயனரும் சிவகாமியும் சளுக்க வீரர்களிடம் சிக்கிக் கொண்டு தவித்த நேரத்தில், கலைக் காதலரான நாகநந்தி உதவி னார். ஆயனரின் உயிர் காப்பாற்றப்பட்டது. ஆனால் சிவகாமி கைப்பற்றப்பட்டு அழைத்துச் செல்லப்படு வதை அவர் தடுக்கவில்லை.

புலிகேசி சிநேகத் துரோகம் செய்து விட்டதை அறிந்து மகேந்திரர் உத்வேகத்துடன் சளுக்கர் படை களை ஒழிக்கப் புறப்பட்டார். இதற்கிடையே பாண்டி யனைப் புறங்காணச் செய்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்த மாமல்லருக்கும் பரஞ்சோதிக்கும் இச் செய்தி எட்ட, இருவரும் மகேந்திர பல்லவருக்கு

உதவப் படைகளுடன் விரைந்தனர். புலிகேசியும் சளுக்க வீரர்களும் விரட்டப்பட்டனர். ஆனால் புலிகேசி வீசிய விஷம் தோய்ந்த கத்தி மகேந்திரரை நிணைவிழக்கச் செய்தது.

சிவகாமியைச் சளுக்க வீரர்கள் கைப்பற்றிச் சென்று விட்டதாக ஆயனரிடமிருந்து அறிந்த மாமல்லர், அவள் நிச்சயம் உயிரை விட்டிருப்பாள் என்று முடிவு செய்தார். மகேந்திரவர்மரின் உடல் நிலையோ கவலைக்கிடமாக இருந்தது. எப்படியும் வாதாபிக்குப் படையெடுத்துச் சென்று சளுக்கர்களைப் பழிக்குப் பழிவாங்குவது என்ற தீர்மானம் மட்டுமே மாமல்லருக்கு வாழ்க்கையில் பிடிப்பைக் கொடுத்தது.

சிவகாமியைப் பற்றிய நினைவுகள் வாட்ட, ஆயனருடன் அவளைப் பற்றி மனம் விட்டுப் பேசும் நோக்குடன் புறப்பட்டார் மாமல்லர். சிவகாமியும் தானும் பேசி மகிழ்ந்த தாமரைக் குளக்கரையைப் பார்க்க எண்ணி அதன் வழியே போனார். அப்போது எதிர்ப்பட்ட ஒரு பெண் அவரைப் பார்த்துத் திடுக்கிட்டாள். அவளை எங்கோ பார்த்த ஞாபகம் மாமல்லருக்கு இருந்தது....

## முப்பத்தைந்தாம் அத்தியாயம்
# கலங்கிய குளம்

ஆஹா! அந்தப் பழைய தாமரைத் தடாகம்தானா இது? சிவகாமியும் தானும் எத்தனையோ இன்பமான தினங்களைக் கழித்த குளக்கரைதானா இது?

ஆம்; அதுதான். ஆனால் அதன் தோற்றம் இப்போது அடியோடு மாறிப் போயிருந்தது. மாமல்லரின் மனம் அடைந்திருந்த நிலையை அந்தத் தாமரைக்குளம் நன்கு பிரதிபலித்தது.

பளிங்குபோல் தெளிந்த தண்ணீர் ததும்பிக் கொண்டிருந்த தடாகத்தில் இப்போது பெரும் பகுதி சேறாயிருந்தது. காண்போர் கண்களையும் உள்ளத்தையும் ஒருங்கே கவர்ந்து பரவசப்படுத்திய செந்தாமரை மலர்கள், குவிந்த மொட்டுக்கள், பச்சை வர்ணக் குடைகள் போல் கவிந்து படர்ந்திருந்த இலைகள் - இவை ஒன்றும் இப்போது இல்லை. யானைகளின் காலினால் சேற்றோடு சேர்த்து மிதிக்கப்பட்ட சில தாமரை இலைகள் காணப்பட்டன. வாடி வதங்கிய இலைகளையுடைய தாமரைக் கொடிகள் துவண்டும் உலர்ந்தும் கிடந்தன.

குளக்கரையில் தழைத்துச் செழித்திருந்த விருட்சங்களின் கிளைகள் முறிக்கப்பட்டுப் பாதி மொட்டையாகக் காணப்பட்டன.

ஆ! அந்த விகப்பலகை! அதுவும் பாதியில் முறிந்து ஒரு பகுதி தரையில் துகள் துகளாய்க் கிடந்தது. இன்னொரு பாதி அப்படியே பிளந்த முனைகளுடன் நின்றது.

இருதயம் உடைந்த மாமல்லர் அந்தப் பிளந்த விகப்பலகையின் மேல் உட்கார்ந்தார். சுற்று முற்றும் பார்த்தார். பழைய ஞாபகங்கள் ஒன்றையொன்று தள்ளிக் கொண்டு போட்டியிட்டுக் கொண்டு வந்தன.

வசந்த காலத்தில், வனத்திலுள்ள மரங்களெல்லாம் புதுத் தளிர்களும் புஷ்பங்களுமாய்க் குலுங்கிக் கொண்டிருந்த நாட்களில், எத்தனையோ தடவை சிவகாமியைத் தேடிக் கொண்டு அவர் அங்கு வந்ததுண்டு. கானகத்துப் பட்சிகள் கலகலவென்று சப்தித்துக் கொண்டிருந்த நேரங்களில், அவரும் சிவகாமியும் அதே விகப்பலகையில் உட்கார்ந்து, கண்களோடு கண்களும் கரங்களோடு கரங்களும் இருதயத்தோடு இருதயமும் பேசும்படி விட்டு, வாய்மூடி மௌனிகளாய் நேரம் போவது தெரியாமல் இருந்ததுண்டு.

கீழ் வான முகட்டில் பச்சை மரங்களுக்கிடையே பொற் குடத்தைப் போல் பூரண சந்திரன் உதயமாகும்போது, அந்த முழு மதியையும் சிவகாமியின் முகத்தையும் மாமல்லர் எத்தனை தடவை ஒப்பிட்டுப் பார்த்திருப்பார்!

தாமரைக் குளத்திலே ததும்பிய தெளிந்த நீரின் விளிம்பிலே நின்று, மேலே தோன்றிய சிவகாமியின் உண்மை உருவத்தையும் தண்ணீரிலே தெரிந்த அவளுடைய பிரதி பிம்பத்தையும் மாறி மாறிப் பார்த்து மகிழ்ந்தது எத்தனையோ நாள்!

இம்மாதிரி ஞாபகங்கள் எல்லாம் மாமல்லருக்கு ஆரம்பத்தில் இன்பத்தை யளித்தன. ஆனால் இடையிடையே, ''இனிமேல் அந்த மாதிரி அனுபவங்கள் நமக்குக் கிட்டப் போவதே இல்லை'' என்ற நினைவு வந்ததும் மனத்தில் கொடிய வேதனை உண்டாயிற்று. இனிமேல் பொறுக்க முடியாது என்ற மனோநிலை ஏற்பட்டதும் மாமல்லர் குதித்து எழுந்தார். விரைந்து

அமரர் கல்கி

சென்று குதிரை மீது தாவி ஏறி ஆயனர் வீட்டை நோக்கிச் செலுத்தினார்.

**கா**ஞ்சியிலிருந்து புறப்பட்ட சமயம் அவர் மனத்திலிருந்த அமைதி இப்போது இல்லை. அமைதிக்குப் பதிலாக இப்போது கோபமும் ஆத்திரமும் அவர் மனத்தில் குடிகொண்டிருந்தன. சிவகாமியைக் கொள்ளை கொண்டுபோன சளுக்கப் பகைவர்கள் மீது குரோதம் எழுந்தது.

மூடத்தனத்தினால் சிவகாமியைப் பறிகொடுத்த ஆயனர்மீது கோபம் கோபமாக வந்தது.

புத்த பிக்ஷுவின் மீது இன்னதென்று விவரமாகாத சந்தேகமும் கோபமும் ஏற்பட்டன. ஆ! அந்தப் பாஷாண்டியினிடம் அவருக்கு எப்போதுமே நல்ல அபிப்பிராயம் கிடையாது. பிக்ஷு மனம் வைத்திருந்தால் சிவகாமியைக் காப்பாற்றியிருக்கலாமல்லவா? ஏன் காப்பாற்றவில்லை? ஏன் ஆயனரிடம் செய்தி ஒன்றும் சொல்லவில்லை? பிக்ஷு என்ன ஆனார்? எப்படி மாயமாய் மறைந்தார்?

சிவகாமியின் அரங்கேற்றம் தடைப்பட்ட அன்றிரவு இராஜ விஹாரத்தின் அருகில் புத்த பிக்ஷுவைச் சுட்டிக் காட்டிச் சக்கரவர்த்தி தமக்கு எச்சரித்தது மாமல்லருக்கு நேற்று நடந்ததுபோல் ஞாபகம் வந்தது.

உடனே, கோபம் தந்தையின் பேரிலேயே திரும்பிற்று. மகேந்திர பல்லவரின் மந்திர தந்திரங்கள், சூழ்ச்சிகள், வேஷங்கள் - இவற்றினாலேதான் பல்லவ இராஜ்யம் இன்றைக்கு இந்தக் கதியை அடைந்திருக்கிறது! தாமும் சிவகாமியை இழக்கும்படி நேரிட்டிருக்கிறது!

திடீரென்று ஒரு விபரீதமான சந்தேகம் மாமல்லரின் உள்ளத்தில் உதித்தது.

ஒருவேளை சிவாகாமி சிறைப்படும் வண்ணம் சூழ்ச்சி செய்தவர் மகேந்திர பல்லவர்தானோ? இல்லாவிடில் எதற்காகத் தன்னைப் போர்க்களத்துக்கு அனுப்பிவிட்டு, மண்டபப்பட்டு கிராமத்திலிருந்து சிவகாமியைத் தருவிக்கிறார்? எதற்காக அரண்மனைத் தோட்டத்தில் ஒரு சுரங்க வழியை ஏற்படுத்தி அதைக் கண்ணபிரானின் மனைவிக்குத் தெரியும்படி செய்திருக்கிறார்?

ஒருவேளை அந்தப் பெண் கமலிகூடச் சக்கரவர்த்தியின் சதிக்கு உடந்தையாயிருந்திருப்பாளோ? எல்லாரும் சேர்ந்து தன்னை இப்படி வஞ்சித்துவிட்டார்களோ! ஆஹா! இது என்ன சதிகார உலகம்? துரோக மும், தீவினையும் நிறைந்த சதிகார உலகம்!

**இ**த்தகைய மனோநிலையில் மாமல்லர், ஆயனர் வீட்டு வாசலுக்கு வந்து சேர்ந்தார். சிவகாமி சிறைப்பட்டது சம்பந்தமாக மர்மமாகவும், விளங்காமலும் இருந்த சில விஷயங்களை ஆயனரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள அவர் விரும்பினார். வீட்டு வாசலுக்குச் சற்றுத் தூரத்திலேயே குதிரையை நிறுத்தி விட்டுத் தாமும் சற்று அங்கேயே நின்று மனத்தை அமைதிப்படுத்திக் கொண்டார். பிறகு சாவதானமாக நடந்து வந்து ஆயனர் வீட்டுக்குள் நுழைந்தார்.

வீட்டுக்குள்ளே பேச்சுக் குரல் கேட்டது அவருக்குச் சிறிது வியப்பையளித்தது. ஆயனர் யாருடன் பேசிக் கொண்டிருக்கிறார்?

உள்ளே சிற்ப மண்டபத்தில் ஆயனருக்கு அருகில் உட்கார்ந்திருந்த மனிதனைப் பார்த்ததும் மாமல்லருடைய வியப்பு அளவு கடந்தது. அந்த மனிதன் ஒற்றர் தலைவன் சத்ருக்னன்தான்!

சத்ருக்னனை அங்கே கண்டதுகூட மாமல்லருக்கு அவ்வளவு வியப்பளிக்கவில்லை. சத்ருக்னனுடைய முகத்தைப் பார்த்ததும் பளிச்சென்று இன்னொரு முகம் ஞாபகத்துக்கு வந்தது. அப்படி ஞாப



கத்துக்கு வந்த முகம் சற்று முன்னால் காட்டுப் பாதையில் அவர் பார்த்த பெண்ணின் முகமேதான்!

என்ன அதிசயமான ஒற்றுமை? ஒருவேளை சத்ருக்னனுடைய தங்கை அல்லது தமக்கையோ அவள்? அல்லது ஒருவேளை இவனே...? சந்தேகம் தோன்றிய ஒரு கணத்திற்குள்ளேயே அது தீர்ந்து விட்டது. சத்ருக்னனுக்கு அருகில் ஒரு சேலையும், மற்றும் ஸ்திரீகளுக்குரிய சில ஆபரணங்களும் கிடந்ததை நரசிம்ம பல்லவர் பார்த்தார்.



# முப்பத்தாறாம் அத்தியாயம்

# சத்ருக்னன் வரலாறு

வாசற்படியில் மாமல்லர் வந்து நின்றதைச் சத்ருக்னனும் ஆயனரும் கவனிக்கவில்லை. அவ்வளவுக்குத் தங்களுடைய பேச்சில் அவர்கள் ஆழ்ந்திருந்தார்கள்.

மண்டபத்துக்குள்ளே மாமல்லர் பிரவேசித்ததும் இருவரும் ஏக காலத்தில் நிமிர்ந்து பார்த்தார்கள். சத்ருக்னன் சட்டென்று எழுந்து நின்று, ''பிரபு!'' என்றான். மேலே ஒன்றும் சொல்ல முடியாமல் அவன் திகைத்தான்.

ஆயனரோ முகத்தில் உற்சாகமும் குதூகலமும் ததும்ப சாய்ந்து படுத்திருந்தவர் நிமிர்ந்து எழுந்து உட்கார்ந்து ''பிரபு! வாருங்கள்! வாருங்கள்! தங்களைத்தான் இப்போது நினைத்துக் கொண்டிருந்தேன். சத்ருக்னன் நல்ல செய்தி கொண்டு வந்திருக்கிறான். குழந்தை சிவகாமி உயிரோடு சௌக்கியமாயிருக்கிறாளாம்!'' என்றார்.

இதைக் கேட்ட மாமல்லரின் தலை சுழல்வது போலிருந்தது.

ஆயனருக்கு அருகில் வந்து நின்று சத்ருக்னனை ஏறிட்டுப் பார்த்த வண்ணம், ''சத்ருக்னா! இது உண்மைதானா?'' என்று கேட்டார்.

''ஆம் பிரபு! உண்மைதான்!'' என்று சத்ருக்னன் கூறிவிட்டுக் கைகூப்பிய வண்ணம், ''பல்லவ குமாரா! சற்று முன்பு காட்டுப் பாதையில் தங்களைக் கண்டபோது பேசாமல் வந்துவிட்டேன், அதற்காக மன்னிக்கவேண்டும். திடீரென்று தங்களைப் பார்த்ததும் பேசக் கூச்சமாயிருந்தது!'' என்று பணிந்த குரலில் கூறினான்.

''அந்தப் பெண் நீதானா? நல்ல வேஷம்!'' என்றார் மாமல்லர்.

''ஆமாம், நானுங்கூடச் சற்று முன்பு திகைத்துப் போய் விட்டேன். பெண் பிள்ளை வேஷம் எவ்வளவு நன்றாய் இவனுக்குப் பலித்திருக்கிறது? சக்கரவர்த்தி ஒவ்வொரு வேலைக்கும் எவ்வளவு பொருத்தமாய் ஆட்களைத் தேர்ந்தெடுக்கிறார்?'' என்றார் ஆயனர்.

மாமல்லர் மெல்லிய குரலில், ''சக்கரவர்த்தியின் சாமர்த்தியத்தை நீங்கள்தான் மெச்சிக் கொள்ள வேண்டும்!'' என்று முணு முணுத்துக் கொண்டார். பிறகு, சத்ருக்னனைப் பார்த்து, ''எதற்காக ஸ்திரீ வேஷம் போட்டாய்?'' என்று கேட்டார்.

''சத்ருக்னன் அந்த வேஷம் போட்டதனால்தான் சிவகாமியைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிந்தது. தயவு செய்து உட்காருங்கள். சத்ருக்னன் எல்லாம் விவரமாய்ச் சொல்லட்டும். நானும் இன்னொரு முறை கேட்டுக் கொள்கிறேன்'' என்றார் ஆயனர்.

மாமல்லர் உட்கார்ந்தார். சத்ருக்னனும் உட்கார்ந்து தன் வரலாற்றைக் கூறத் தொடங்கினான். அந்த வரலாறு இது தான் :

''ஆயனரும் சிவகாமியும் காஞ்சிக் கோட்டையிலிருந்து சுரங்க வழியாக வெளியே போய் விட்டார்கள் என்று தெரிந்ததும் சக்கரவர்த்திக்கு இடி விழுந்தது போலாகி விட்டது. உடனே தாமும் கோட்டைக்கு வெளியே போகத் தீர்மானித்துப் படைகளை ஆயத்தம் செய்யும்படி கட்டளையிட்டார். பிறகு என்னைத் தனியாகக் கூப்பிட்டு, 'சத்ருக்னா! நீ இதுவரையில் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு எத்தனையோ சேவைகள் செய்திருக்கிறாய். ஆனால், அவை எல்லாவற்றையும் காட்டிலும் முக்கியமான சேவை இப்போது செய்ய வேண்டும். மாமல்லன் மட்டும் இப்போது இங்கிருந்தால் நானே அந்த வேலையை மேற்கொள்வேன். பல்லவ குலத்தின் மானத்தைக் காப்பதற்காக நான் இப்போது போருக்குப் புறப்பட வேண்டியிருக்கிறது. சிவகாமியைக் கண்டு பிடித்து அவளைத் திருப்பிக் கொண்டு வரும் வேலையை உன்னிடம் ஒப்படைக்கிறேன். சிவகாமியை மீட்டுக் கொண்டு வர முடியாவிட்டால் அவளைப் பத்திரமாகப் பாதுகாக்க வேண்டும்' என்று கட்டளையிட்டார். இதைக் கேட்டு நான் திகைத்துப் போனேன். 'பிரபு! சிவகாமி அம்மை சளுக்கரிடம் சிறைப்பட்டிருந்தால் தன்னந்தனியாக நான் என்ன செய்வேன்?' என்றேன். 'கஷ்டமான காரியமானபடியால்தான் உன்னிடம் ஒப்படைக்கிறேன், சத்ருக்னா! நீ இதுவரை எத்தனையோ வேஷங்கள் போட்டிருக்கிறாய். அவை எல்லாவற்றையும் விட உனக்கு நன்றாகப் பலிக்கக்கூடிய வேஷம் ஒன்று இருக்கிறது. அது பெண் வேஷந்தான்!' என்றார். சக்கரவர்த்தியின் கருத்தை நான் உடனே தெரிந்து கொண்டேன். சற்றுமுன் பார்த்தீர்களே! அம்மாதிரி வேஷம் தரித்துக் கொண்டு காஞ்சியை விட்டுக் கிளம்பி முதலில் இந்த வீட்டுக்கு வந்து சேர்ந்தேன்.

''நான் வரும் சமயத்திலேதான் இவரை ஸ்மரணையற்ற நிலையில் இந்த வீட்டுக்குள்ளே கொண்டு வந்தார்கள். இவரோடு சிவகாமி தேவி வரவில்லை. எனவே, தேவி

சளுக்கரிடம் சிறைப்பட்டுத்தான் இருக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டு புறப்பட்டேன். காஞ்சிக் கோட்டையைச் சுற்றிச் சென்றேன். சளுக்க ராட்சதர்களின் கூக்குரல் கேட்ட இடங்களிலெல்லாம் மறைந்திருந்து கவனித்தேன். கடைசியில் காஞ்சிக்கு வடமேற்கே ஒரு பெரிய சளுக்கர் படை வடதிசையை நோக்கிப் புறப்பட்டுக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். அந்தப் பெருங்கும்பலுக்கு மத்தியிலிருந்து ஸ்திரீகள் புலம்பி அழும் சத்தம் வந்து கொண்டிருந்தது. இன்னும் அருகில் சென்று பார்த்த போது, அவ்வாறு ஓலமிட்ட ஸ்திரீகள் நம் கிராமங்களில் சிறைப் பிடிக்கப்பட்டவர்கள் என்று தெரிந்தது. அந்தப் பெண்களுக்கு நடுவே பல்லக்கு ஒன்றும் காணப்பட்டது. அதில் இருந்தவர் சிவகாமி தேவிதான் என்று தெரிந்து கொண்டேன்.

''சற்று நேரத்துக்கெல்லாம் நான் தலைவிரிகோலமாய் 'ஓ' என்று ஓலமிட்டுக் கொண்டு அந்தப் படையை நோக்கி ஓடினேன். பின்னால் என்னை யாரோ துரத்தி வருவதுபோலப் பாசாங்கு செய்து திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு ஓடினேன். சளுக்கர்கள், 'வந்தாயா? வா!' என்று பரிகாசக் குரலில் கூறிக்கொண்டு என்னை அழைத்துப்போய் மற்றச் சிறைப்பிடிக்கப் பட்ட பெண்களுடனே சேர்த்து விட்டார்கள். சற்று நேரம் மற்றப் பெண்களைப் போல் நானும் ஓலமிட்டுக் கொண்டிருந்தேன். பிறகு மெள்ள மெள்ளப் பல்லக்கை நெருங்கிச் சென்று அதிலிருப்பது சிவகாமி அம்மைதான் என்று உறுதிப்படுத்திக் கொண்டேன். சிவகாமியை அவ்வளவு மரியாதையுடன் அழைத்துப்போன காரணத்தையும் ஊகித்தறிந்தேன். அந்தச் சளுக்கர் படையின் தலைவனாகிய த ள ப தி சசாங்கன், சிவகாமி அம்மையைப் பத்திரமாய்க் கொண்டுபோய் வாதாபிச் சக்கரவர்த்தியிடம் ஒப்புவித்துப் பல்லவ நாட்டின் சிறந்த கலைச் செல்வத்தைக் கொள்ளை கொண்டு வந்ததற்காகப் பரிசு கேட்கப் போகிறான்! இந்த எண்ணத்தினால் எனக்கு ஒருவாறு மனநிம்மதி ஏற்பட்டது. சிவகாமி அம்மைக்கு உடனே தீங்கு எதுவும் நேராது என்று தைரியம் அடைந்தேன். ஆனால், சளுக்க ராட்சதப் படையால் சூழப்பட்ட சிவகாமியை அங்கிருந்து அப்புறப்படுத்தி அழைத்துச் செல்வது சாத்தியமான காரியமாகவே தோன்றவில்லை. எத்தனையோ உபாயங்கள் யோசித்து யோசித்துப் பயன்படாது என்று கைவிட்டேன்.

''இதற்கிடையில் எல்லாரும் வடதிசை நோக்கிப் போய்க் கொண்டேயிருந்தோம்.

## அருள்வாக்கு



ஸமயானுஷ்டானங்களில் இப்போது நாம் இருக்கிற தசையில், நம் மதம் காட்டும் இரண்டு எக்ஸ்ட்ரீம்களில் பண்டிகைச் சாப்பாடு, பஜனைக்கூத்து, உருவ வழிபாடு இவற்றில் கிடைக்கிற ஆனந்தம், பட்டினியிலும் மௌனத்திலும், ஆத்ம த்யானத்திலும் கிடைப்பதில்லை. ஏதோ ஒரு பாவனையின் பேரிலும், 'இது பெரியவர்கள் காட்டும் வழியாச்சே' என்ற நம்பிக்கையின் பேரிலுந்தான் இப்போது நமக்குத் தெரியாதவையாக இருப்பவற்றுக்கான அனுஷ்டானத்தைப் பண்ண முடிகிறது. ஆனாலும் விடாமல் பண்ணினால் வாழ்க்கையில் 'மாடரேஷன்' வரும்.

இப்படி 'மாடரேஷனில்' (மிதம்) நன்றாகப் பழக்கப்பட்டு முதிர்ந்த நிலைமை, கனிந்த நிலைமை உண்டாகிறபோது, இப்போது எது நமக்குத் தெரியாததாக இருக்கிறதோ, இன்னொரு எக்ஸ்ட்ரீமாகத் தோன்றுகிறதோ, எதை நாம் ஏதோ ஒரு பாவனையின் பேரில் தான் கொஞ்சம் ஊகித்துப் பார்க்க மாத்திரமே முடிகிறதோ, அது - அதாவது பரமாத்மாவோடு ஏகமாக ஒன்றியிருக்கிற நிலை எக்ஸ்ட்ரீமாக இல்லாமல், ஸஹஜமான எக்ஸ்பீரியன்ஸாக ஆகிவிடும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

வெள்ளாறு என்று வழங்கும் பொன்முகலி யாற்றங்கரைக்குப் போய்த் தங்கினோம். இவ்விடத்தில் தளபதி சசாங்கன் பெரு மனக்குழப்பத்தை அடைந்தவனாகக் காணப்பட்டான். அதன் காரணமும் சளுக்க வீரர்களின் சம்பாஷணைகளிலிருந்து தெரிந்து கொண்டேன். மணிமங்கலத்தில் வாதாபிச் சக்கரவர்த்திக்கும் மகேந்திர பல்லவருக்கும் நடந்த பெரும் போரைப் பற்றித் தூதர்கள் கொண்டுவந்த செய்திதான் காரணம். இந்தச் செய்தி தளபதி சசாங்க னுக்கு அவ்வளவு குழப்பம் ஏன் அளித்தது என்பதையும் நான் ஊகித்தறிந்தேன். வாதாபிச் சைனியத்தில் பெரும் பகுதியுடன் புலிகேசி முன்னால் சென்று விட்டதாக வும், இதற்குள்ளாக அவர் வடபெண்ணைக் கரையை அடைந்திருக்க வேண்டும் என்றும் சசாங்கன் எண்ணிக் கொண்டிருந் தான். இப்போது புலிகேசி தனக்குப் பின் னால் தங்கி மாமல்லபுரத்துக்குப் பக்கத்தில் மணிமங்கலத்தில் சண்டையிட்ட தாகச் செய்தி வந்ததும் சசாங்கன் திகைத்தது இயற்கைதானே? சக்கரவர்த்தியைப் பின் னால் விட்டுவிட்டுத் தான் முன்னால் ஓடி வந்தது பற்றி அவருக்குக் கோபமோ என்னவோ என்று சசாங்கன் ரொம்பவும் தவித்துக் கொண்டிருந்ததாகத் தெரிந்தது. பொன் முகலி ஆற்றங்கரைக்கு நாங்கள் வந்து சேர்ந்த மறுநாள் சசாங்கன் தன் சளுக்கப் படைகளுடன் தென்கரையில் இருந்து கொண்டு சிறைப்பிடித்த ஸ்திரீக ளாகிய எங்களை மட்டும் அக்கரைக்கு அனுப்பினான். எங்களைக் காவல் புரிவ தற்குச் சில சளுக்க வீரர்களை உடன் அனுப்பி வைத்தான்.

''அக்கரை சென்றதும், 'இது ஒரு நல்ல சந்தர்ப்பம்; சிவகாமி அம்மையை அழைத் துக் கொண்டு போய்ப் பக்கத்தில் காணப் படும் குன்றுகளிலே ஒளிந்து கொள்ளலாம். காவலர்கள் சிலர்தான் இருப்பதால் அவர் களுக்குத் தெரியாமல் இரவு நேரத்தில் தப்பிச் செல்லலாம்' என்று தீர்மானித்தேன். அன்றிரவு, எல்லோரும் தூங்க யத்தனம் செய்த சமயத்தில் நான் சிவகாமி அம்மை யின் அருகில் இருக்கும்படி ஏற்பாடு செய்து கொண்டேன். மற்றப் பெண்கள் எல் லாரும் தூங்கிய பிறகு பிராகிருத பாஷை யில் என்னை இன்னாளென்று தெரிவித்துக் கொண்டேன். சிவகாமி முதலில் பெரிதும் ஆச்சரியமடைந்தார். பிறகு, ஆயனரைப் பற்றிக் கேட்டார்; தங்களைப் பற்றியும் விசாரித்தார். ஆனால் தங்களைப்பற்றி எனக்கு அப்போது தெரிந்திருக்கவில்லை. தாங்கள் தெற்கேயிருந்து திரும்பி வந்த விவரமே தெரியாது. ஆகையால், ஆயனர் உயிர் பிழைத்திருக்கிறார் என்ற விவரத்தை மட்டும் சொன்னேன். பிறகு மெள்ள, மெள்ள என் யோசனையையும் தெரி வித்தேன். பிரபு! என்னுடைய ஏமாற் றத்தை என்னவென்று சொல்வேன்......''

(தொடரும்)




ராணுவ முகாமில் ராம்சிங்குக்குக் காவல் வேலை. சிங் கொஞ்சம் தூக்கப் பிரியர். மத்தியான நேரத்தில் ஒருநாள் நன்றாக அசந்து விட்டார். அப்போது ஒரு நீளமான கனவு. ராம்சிங் அயல் நாடு ஒன்றில் உளவு பார்க்க அனுப்பி வைக்கப்பட்டிருக்கிறார். பல ரகசியங்களைத் தெரிந்து கொண்டு விட்டார். ஆனால் சற்றும் எதிர்பாராத போது எதிரிகளிடம் பிடிபட்டு விட்டார். எதிரி ராணுவ கோர்ட் அவரை விசாரித்து மரண தண்டனை வழங்கி விட்டது. சிங்கைக் கட்டுத் தன்ன துப்பாக்கி ஏந்திய நாலு வீரர்கள் குறி பார்த்தார்கள்.

சிங் இந்த மாதிரி கனவு கண்டு கொண்டிருக்கும் போது, முகா மின் தளபதி அந்தப் பக்கமாக வந்தார். சிங் தூங்கிக் கொண்டி ருப்பதைப் பார்த்ததும் கோபமாக வேலியைத் தடதடவென்று தட்டினார்.

அந்தச் சத்தம் தன்னைச் சுடத் தயாரான துப்பாக்கிகள் எழுப்பிய சத்தம் என்று சிங் அதிர்ந்து போய் அந்த அதிர்ச்சியில் செத்து விட்டார்!

இந்தக் கதையில் ஓர் அபத்தம் உள்ளது. என்ன கண்டு பிடியுங்கள் பார்க்கலாம்.

விடை : 56 ஆம் பக்கம்.




குளத்து மேட்டில் உட்கார்ந்திருந்த ராஜப்பனின் பார்வை முருகன் கோயிலுக்கு முன்னும் பின்னும், விளைந்தும் கரம்புமாய் இருந்த நிலங்களின் மீது ஓடியது. விர்ரென்று வீசிய காற்று, விளைந்த கதிர்களை அசைத்து விளையாடிக் கொண்டிருந்தது.

எங்கும் பசுமை விரிந்திருக்க வேண்டிய காலம் இது. இப்பொழுது கிணற்றுப் பாசனக் கழனிகள் மட்டுமே விளைந்திருக்கின்றன.

மூன்றாம் வருஷம் ஹோவென்று ஓயாத மழை. பகல், இரவு எப்பொழுதும் நிற்காத மழை. இரண்டு நாள் மழைக்குப் பிறகு குடையுடன் ஏரி மீது நடந்து போய் ஆர்வமாகக் கலங்கலைப் பார்த்தவர்கள் அசந்து போனார்கள். எந்த வருஷமும் காணாத அதிசயமாய் ஆறடி உயரம் தண்ணீர் விழுந்தது.

ஆச்சர்யப்பட்டார்கள்.

ஆனால் - அடுத்த நாளும் மழை விடாமல் பெய்த போது அச்சப்பட்டார்கள்.

மீண்டும் போய் கரை ஏறினார்கள். கரையை எட்டிப் பிடிக்கிற அளவுக்குத் தண்ணீர் மட்டம். அங்கங்கே விரிசல்கள் தென்பட்டன.

கொட்டும் ம ழை யி ல் ஆட்கள் இறங்கிக் கரையை அடைத்தார்கள்.

பி. டபிள்யூ. டி. என்ஜினீயர், சப்-கலெக்டர், எம்.எல்.ஏ. எல்லோரும் வந்து பார்த்தார்கள்.

அடைத்த இடத்தை விட்டுப் புதிய இடங்களில் விரிசல். மதகுகள் திறந்தபடியே இருந்தன. கலங்கல் விழுந்து கொண்டே இருந்தது. ஆனாலும் - மழை நிற்கவில்லையே!

மழை நின்றால் கூட உடனே அபாயம் அகன்று விடாது. மேற்கிலிருந்து திரண்டு வரும் தண்ணீரெல்லாம் இந்த ஏரியில்தான் விழும்.

கலெக்டர் வந்தார். அவரிடம் முறையிட்டார்கள். ஊரைக் காக்க உடனே ஏதாவது செய்தாக வேண்டும். கரையின் கீழே முப்பதாயிரம் உயிர்கள், அவர்களின் உடைமைகள்.

நிலைமையை விவாதித்து, தீர்மானத்துக்கு வந்து, உடனடியாக ஏதாவது செய்தாக வேண்டும்.

கொட்டும் மழையில் நிற்க முடியாமல் கார்கள் புறப்பட்டன. பயணியர் மாளிகையில் ஆலோசித்தார்கள்.

ஜன்னலின் வழியே 'ஹோ'வென்று

எஸ். உமர்



கதாசிரியர் : என் கதை அறுவையாக இருக்கட்டும்; அதுக்காக இப்படியா பிறந்தநாள் கேக் கொண்டு வர்றது?

- வேதாரண்யம் வேதமூர்த்தி

கலங்கலில் விழும் தண்ணீரின் இரைச்சலும் அது அளவற்றுப் புரண்டு ஓடும் கிளியாற்றின் நீர் மட்டமும் அச்சுறுத்திக் கொண்டிருந்தன.

முன்பொருமுறை இதே சூழ்நிலையில் வெள்ளைக்கார கலெக்டர் கையைப் பிசைந்து நின்ற போது -

ராமபிரான் கோதண்டத்துடன் வந்து அம்பெய்திக் கரையைக் காத்ததாக ஸ்தல வரலாறு.

இப்பொழுதும் அப்படி ஒரு அதிசயம் நடந்தாக வேண்டும்.

பிரார்த்தனையை மட்டுமே நம்பியிருக்காமல் மனித யத்தனமும் தொடர்ந்தது.

இறுதியில் அந்த முடிவு எடுக்கப்பட்டது. ஊரைக் காக்கும் முயற்சியில் சில கிராமங்கள் பாதிக்கப்படும் என்றாலும் பேரூரின் இழப்பைக் காட்டிலும் அவற்றின் பாதிப்பு அளவில் குறையும்.

கலங்கலின் சுவர் வெடி வைத்துத் தகர்க்கப்பட்டது. சீற்றத்துடன் தண்ணீர் பாய்ந்தது. கிளியாற்றின் மட்டம் மேலும் உயர்ந்து ஓடியது.

ரயில்வே பாலம், கிராமங்கள், கால் நடைகள், அபூர்வமாய் ஒன்றிரண்டு மனித உயிர்கள் - எல்லாமே வெள்ளத்தில் போயின.

ஏரி முற்றிலுமாக வடிந்து போயிற்று.

அதற்குப் பிறகு கலங்கல் சுவர் செப்பனிடப்பட்டது. ஏரியின் கரையும் உயர்த்தப்பட்டது.

மழைதான் பெய்யவில்லை.

புத்தகங்களில் வரும் வடகிழக்கு, தென்மேற்குப் பருவ மழைகளைக் காணோம். பருவம் விட்டுப் பெய்தன. பற்றாக்குறையாக.

மழை மாதங்களில் வெயில் தகித்தது. இரவுகளில் பனி! எல்லாமே மாறிப் போய் விட்டன.

"என்ன ராஜப்பா, யோசனை?"

"ஒண்ணுமில்லே, தங்கவேலு. ரெண்டு வருஷமா இப்படி மானங் காஞ்சிப் போச்சேன்னு நினைச்சிட்டிருந்தேன்."

"அவ்வளவுதான்! விவசாயத்துக்கு இனி காலமில்லே, ராஜப்பா."

சுரீரென்றது. தம்பி கந்தப்பனும் இதைத்தான் எழுதியிருந்தான்.

வீட்டுக்குத் திரும்பினான்.

"நிலந்தான் தரிசாக் கிடக்குதே! நேரத்துக்கு வந்து சாப்பிடறதுக்கென்ன?" என்று கேட்டாள், கமலா.

பதில் பேசாமல் கையைக் கழுவிக் கொண்டு வந்து உட்கார்ந்தான்.

தட்டில் இட்டிலியும் சட்டினியும் வைத்தாள்.

"இதென்ன வேர்க்கடலை சட்டினியா?"

"ஏன், சாப்பிட்டா தெரியலியா?"

"எங்கே தெரியுது? அம்மோனியால விளையற கடலை ரொம்பப் பெரிசாத்தான் இருக்கு. ஆனா ருசி இல்லையே! இட்டிலி கூடத்தான் மாறிப் போச்சி."

"நான் எப்பவும் போலத்தான் செய்யறேன்."

"நான் உன்னைக் குறை சொல்லலே. கை பாகம் அப்படியேதான் இருக்கு. ஆனா மண்ணு மாறிடுச்சே!"

"ஆமாம், எப்ப உங்க தம்பியைப் பார்க்கப் போறீங்க?"

"அதான் லெட்டர் போட்டிருக்கானே! நாளைக்குப் போகலாம்னு இருக்கேன்."

"என்ன முடிவு பண்ணீங்க?"

"........."

"எனக்கென்னவோ உங்க தம்பியோட அபிப்பிராயம்தான் சரின்னு படுது. நமக்கென்ன பிள்ளையா, குட்டியா? நிலத்தையும் தோட்டத்தையும் வித்து பேங்கல போட்டு, வட்டியைச் சாப்பிட்டுட்டுப் போகலாம்."

"சரி, யோசிக்கலாம்."

சுவர்க்கோழியும் ராஜப்பனும் மட்டுமே விழித்திருந்தார்கள். புரண்டு படுத்தாலும் தூக்கம் வரவில்லை. மனசு கிடந்து அலைந்தது.

கந்தப்பன்.

தங்கவேலு.

கமலா.

எல்லோருமே அப்படித்தான் சொல்கிறார்கள். இனி விவசாயத்திற்கு கால

மில்லையா? இனி இங்கே பிழைக்க முடியாதா? நிலத்தையும் தோட்டத்தையும் விற்று விட... முடியுமா? மண்வாசனையை மறந்து... புரண்டு, புரண்டு யோசித்தான்.

பின் - தூங்கிப் போனான்.

தம்பியின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்த போது அவன் மனைவி அங்கயற்கண்ணி தான் வீட்டில் இருந்தாள்.

''வாங்க, மாமா. லெட்டர் போட்டிருந்தா ஸ்டேஷனுக்கு வந்திருப்போமே!''

''நான் என்ன சின்னப்பிள்ளையா? தன்னால வந்துட்டுப் போறேன்.''

''உட்காருங்க.''

ஹார்லிக்ஸ் கொண்டு வந்து கொடுத்தாள்.

பத்து நிமிஷம் சுபாவமாய்ப் பேசிக் கொண்டிருந்தாள்.

''இலை போடறேன். கை கழுவிட்டு வாங்க.''

''பிள்ளைங்க வருவாங்களா?''

''இல்லை, காலையில டப்பாவில போட்டுக் கொடுத்துடுவேன். ஸ்கூல்லியே சாப்பிட்டுட்டு, சாயங்காலம்தான் வருவாங்க.''

கையைக் கழுவிக் கொண்டு வந்து உட்கார்ந்தான். மந்தாரை தையல் இலை. கழுவினாள். சோறு போட்டாள்.

''இவ்வளவு சூடா இருக்கே!''

''ஹாட் பேக்ல வச்சது.''

ஆவி பறந்தாலும் சோற்றில் வாசமில்லை.

பருப்புப் பொடியை வைத்து நெய் ஊற்றினாள்.

முருங்கைத் துளிர் போட்டுக் காய்ச்சும் போதும் சோற்றில் விழுந்து உருகும் போதும் மணக்குமே, அந்த மணம் எங்கே?

துவையல் கூட ருசியில் ஒரு மாற்று குறைந்திருந்தது.

''சாப்பாடு பரவாயில்லையா?''

''ம்... உங்க அக்கா மாதிரி உனக்கும் நல்ல கைபக்குவம்மா. ஆனா.. இப்பல்லாம் நாம சாப்பிடற சாப்பாட்டில ருசி கம்மிதான்! அதுக்கு நீங்க ஒண்ணும் பண்ண முடியாது.''

''ஏன் அப்படிச் சொல்றீங்க?''

''விஞ்ஞானம் நம்மை ரொம்பத்தான் முன்னேத்திடுத்து. உலகத்தைப் புரிஞ்சிக்கவும் வேகமா போட்டி போடவும் உதவுது. இந்த ரசாயன உரம் வந்த புதுசில மகசூலெல்லாம் பிரமாதமா வந்தது! ஆனா... எத்தனை புதுவகைப் பூச்சிங்க! எத்தனை பயிர் நோய்ங்க!... அந்தக் காலத்தில கடை மடக்குவோம். தழை போட்டு உழுவோம். சம்பா விதைப்போம். கிச்சடிச் சம்பா



''தமிழ் வாத்தியார் தன் பையன் கல்யாணத்தில மொய் வாங்கப் போறதைக் கல்யாணப் பத்திரிகையிலேயே இலக்கிய நயத்தோடு குறிப்பிட்டிருக்காரு...!''

''என்னன்னு?''

'''மொய்ப் பொருள் காண்பதறிவு'ன்னு போட்டிருக்கார்!''

- தங்காடு போஜா

ருசியை இப்ப நினைச்சாலும் எச்சி ஊறுதும்மா....''

**மா**லையில் குழந்தைகள் வந்ததும் அங்கை பால் கொடுத்தாள்.

பிஸ்கட்களைப் பிரித்து வைத்தாள்.

சின்னவன் சாப்பிட முரண்டு பிடித்தான்.

''ஏன் ராஜா, மத்தியானம் சாப்பிட்டது தானே! பசிக்கலியா?''

''இல்லை, பெரியப்பா. வயிறு வலிக்குது.''

''இவன் இப்படித்தான் அடிக்கடி கஷ்டப்படறான். அந்த அலமாரியில இருக்கிற மருந்து, மாத்திரையெல்லாம் அவனுடையதுதான்!''

ராஜப்பன் அலமாரியில் இருக்கும் மாத்திரைகளை எடுத்துப் பார்த்தார். அன்ட்டாசிட் மாத்திரைகள்! கிராமத்தில் மீன் குழம்பும் கருவாட்டுக் குழம்பும் சாப்பிடும் கிழவர்களுக்குத்தான் அபூர்வமாக இப்படி வயிறு வலிக்கும். சாராயம் குடிப்பவர்களுக்கு நாற்பது வயசில் அல்சர் வரும்.

இங்கே இந்தப் பிஞ்சுக்கு வயிற்றுவலி! அதற்கு அன்ட்டாசிட் மாத்திரைகள்.

காலம்....! தாய்ப்பாலில் ரசாயனம் கலந்திருக்கும் காலம்!

**கந்**தப்பன் வந்தவுடன் பொதுவான ஊர் நிலவரம், குடும்பநலம் விசாரித்தான்.

வெளியே காய்கறி வாங்கக் கிளம்பினாள்.

''வரீங்களாண்ணே? வெளியே போய்ட்டு வரலாம்.''

''இல்லே தம்பி. அலுப்பா இருக்கு.''

''அவள் கடைக்குப் போய்த் திரும்பி வந்த பின்பு - எல்லோரும் ஒன்றாக உட்கார்ந்து சாப்பிட்டார்கள்.

வெற்றிலை போட்டுக் கொண்டு, கந்தப்பன் மொட்டை மாடிக்கு வந்தான். ராஜப்பனும் எதிரே உட்கார்ந்தான்.

''லெட்டர் கிடைச்சுதா?''

''அதைப் பார்த்துட்டுத்தான் வந்திருக்கேன்.''

''இனிமே விவசாயத்துக்குக் காலமில்லே, அண்ணே! அங்கே கரம்பாக் கிடக்கிற நிலத்தையும் அரையும் குறையுமா விளையறதையும் வித்துட்டு இங்கே வந்துடுங்க. ரெண்டு ஆட்டோவை வாங்கி விட்டுப் பிழைச்சிக்கலாம். இப்படியே செட்டில் ஆயிடலாம். கிராமத்து வாழ்க்கையை விட இது வசதியா இருக்கும்.''

''நிஜம்தான்! ஆனா....''

''ஆனா என்ன?''

''காலம் காலமா கிராமத்திலேயே இருந்தாச்சு. சொந்த நிலம், தோட்டம், விவசாயம்தான் தொழில்னு பழகிப் போயிடுச்சி.''

''அண்ணே, இந்த சென்ட்டிமெண்ட் எல்லாம் நம்ம முன்னேற்றத்துக்குத் தடை.''

''சென்ட்டிமெண்ட் மட்டுமில்லே தம்பி, சுயநலமும்தான்!... உனக்கு ஞாபகம் இருக்கா? நம்ம அம்மா கலவங்கீரையைப் பறிச்சி சமைப்பாங்களே! அந்த ருசியை இப்ப நம்மால அனுபவிக்க முடியுதா?''

''..........''

''ஆத்தூர் கத்தரிக்காயை வாங்கிச் சமைப்பாங்களே... அதோட டேஸ்ட்டே தனி. இப்ப அந்த ருசி கிடைக்குமா?''

''அது சரி, நாம நிலத்தை விக்கவேண்ணா இதெல்லாம் மாறிடுமா?''

''அப்படிச் சொல்லலே. எவ்வளவுதான் முன்னேற்றம் தேடிப் போனாலும் இயற்கையையும் அதன் மூலம் கிடைக்கக்கூடிய இன்பங்களையும் புறக்கணிச்சிட்டா வாழ்க்கை அர்த்தமற்றுப் போகுது. ஓடி ஓடி ஆயிரம் ஆயிரமாச் சம்பாதிச்சாலும் அதை ஒரு நாளாவது உட்கார்ந்து அனுபவிச்சாத்தான் சந்தோஷம். நம்ம நிலம் அப்படியே கரம்பா கிடந்துடாது. மழை பெஞ்சா... மேற்கு மூலையில இருக்கிற துண்டில இயற்கை உரங்களைப் போட்டுக் கிச்சடி சம்பா விதைக்கலாம். தோட்டத்தில கத்தரியும் கீரையும் பயிரிடலாம்.''

''பழைய 'ப்ரீட்' விதைங்க கிடைக்குதா?''

''கிடைக்கும். இப்பவும் பெருந்தனக்காரங்கள்ளாம் அவங்க பண்ணையில சொந்த உபயோகத்துக்குன்னு இப்படி பயிர் வச்சிட்டுத்தான் இருக்காங்க.''

ஆத்தூர் கத்தரி, பேட்டைக் கீரை, கலவங்கீரை, கிச்சடிச் சம்பாச் சோறு, உருக்கு நெய்யின் மணம் எல்லாம் மனசில் வர -

''உங்க விருப்பப்படியே செய்யுங்க, அண்ணே'' என்று கந்தப்பன் அவன் கைகளைப் பற்றினான்.

பட்டணத்துவாசிகளைப் பொறுத்த வரை கிராம தேவதைகள் என்பன பஸ் பிரயாணத்தின் போது கிராமப்புறங்களில் தென்படும் பிரும்மாண்டமான சிலைகள்; அல்லது அந்தஸ்து மிக்கோர் உணவருந்தச் செல்லும் ஹோட்டல்களில் காணப்படும் அலங்காரக் காட்சிப் பொருள்கள். ஆனால் இதே அய்யனார், சிலைகள்தாம் கிராம வாசிகளின் வணக்கத்துக்குரிய காவல் தெய்வங்கள். வெட்டவெளியில், மழையில் நனைந்து, வெயிலில் காய்ந்தபடியே இந்த கிராம தேவதைகள் காத்தருள்கிறார்கள். பல கோவில்களில் இன்னின்ன தினங்களில் தான் பொங்கலிட வேண்டும் என்ற கட்டுப்பாடு கூட கிடையாது. சௌகரியப்பட்ட நாளில் பொங்கலிட்டுப் பூஜை செய்யலாம். சில கோவில்களில் சிலைகள் கூட இருப்பதில்லை. அடையாளமாக நடப்பட்ட சிறு கல்லையே வழிபடுகிறார்கள்.

மக்களின் ஆழமான நம்பிக்கையையே அஸ்திவாரமாகவும் அவர்களுடைய பய பக்தியையே கோபுரமாகவும் கொண்டுள்ள கிராம தேவதைக் கோவில்களின் பின்னே நெக்குருகி மெய்சிலிர்க்க வைக்கும் கதைகள் எப்பொழுதும் உண்டு. கழுவில் ஏற்றிக் கொல்லப்பட்ட காத்தவராயன் என்ற வீரன் புதைக்கப்பட்ட இடத்தில், அவன் நினைவு நாளன்று இளநீர் படையலிட்டு வந்தார்கள். நாளாவட்டத்தில் இவன் கதை ஊர் ஊராகப் பரவி தெய்வ நிலைக்கு இவன் உயர்ந்தான். கோவில்கள் எழுந்தன.

தென்னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த நெய்வாசல் கிராம மக்கள் சிலர்

◆ வாழு முனி, சடாமுனி; நடுவில் செம்மலையப்பர்



இடம்பெயர்ந்து, வெள்ளாற்றைக் கடந்து திருச்சி மாவட்டம் சன்னாசிநல்லூருக்குப் பிழைப்பு தேடி வந்தார்கள். தங்கள் ஊர் தெய்வத்தையும் அவர்கள் 'அழைத்துக்' கொண்டு வந்தார்கள். இவ்வாறு இடம் பெயரும் போது சொந்த ஊர்க் கோவிலிலிருந்து ஒரு பிடி மண் அல்லது ஒரு கல்லை எடுத்து வந்து புதிய இடத்தில் வைத்துக் கோவில் அமைக்கும் வழக்கம் உண்டு. எதிர்ப்பதியம், பிடிமண் கோவில் என்று இதைச் சொல்கிறார்கள். பச்சையம்மனுக்கு இவர்கள் எடுப்பித்த கோவில் நாளடைவில் விரிவடைந்து பூமலையப்பர் கோவில் என்று ஆகி, திட்டக்குடி சுற்றுவட்டாரத்தில் மிகுந்த நம்பிக்கைக்குரிய காவல் தேவதையின் கோவிலாகத் திகழ்கிறது.

## செம்படவர் சிலைகள்

இக் கோவிலின் தல வரலாறு என 1910 இல் நடந்த ஒரு நிகழ்ச்சியை எழுதி வைத்திருக்கிறார்கள். அருள்மிகு பூமலையப்பர் சமேத முத்துக் கருப்பையா சாமி, வெள்ளாறும் சின்னாறும் சங்கமிக்கும் கூட்டாற்று மூலையில் வேட்டைக்குச் சென்றார். அந்த நேரத்தில் யாரும் எதிர்ப்படக் கூடாது என அவர் விதித்த ஒழுங்கை மீறி எதிரில் ஏழு செம்படவர்கள் வந்து விட்டார்களாம். இதனால் அந்த ஏழு பேரும் தெய்வக் குற்றத்துக்கு ஆளாகிக் கண் பார்வை இழந்து விட்டனர். மீண்டும் பார்வையைப் பெற மனமுருகி வேண்டி, தங்கள் எழுவர் சிலைகளையும் வடித்து வைத்து பலிகொடுத்தார்களாம். பூமலையப்பர் அருளால் பார்வை திரும்பி விட்டது.

'ஸ்ரீவலைக்காரர்கள்' என்ற பெயரில் ஏழு செம்படவர்களின் சிலைகளும் கதை மண் சிற்பங்களாகப் பூமலையப்பர் கோவிலில் காணப்படுகின்றன. ஏழு பேருக்கும் பொதுவாக ஒரே மீன் பிடிவலை மாலை! மன்னித்தருளும் பாவனையில் கம்பீரமாய் நிற்கின்றன பெரிய பூமலையப்பர் மற்றும் சிறிய பூமலையப்பர் சிலைகள். இவர்கள் இருவருக்கும் நடுவே தாடி, சடாமுடியுடன் ஒரு குறுமுனிவரின் சிலை. இவரைப் பூமலையப்பரின் ஆதி குரு என்கிறார்கள். பூமலையப்பருக்கு எதிராக யானை வீரன், குதிரை வீரன் சிலைகள். முத்துக் கருப்ப சாமி, கொங்காணிக் கருப்பன், ஆதி பூமலையப்பர், வாழுமுனி, சடாமுனி, செம்மலை

# கிராம

யப்பர் என இன்ன பிற தெய்வங்களும் அச்சுறுத்தும் அழகோடு காட்சி தருகி



# தேவதைகள்

றார்கள். எதிர்ப்பக்கத்தில் தனியாகப் பச்சையம்மன் கோயில், அவளுக்குத் துணையாய்ப் பூங்காய் அம்மனும் காத்தாயி அம்மனும்...

விவசாயிகளுக்குப் பூமலையப்பர்பால் அளவுகடந்த பக்தி. பச்சையம்மன் இவர்களுக்கு அதி தேவதை - பெயரிலேயே பசுமையைக் கொண்டவளல்லவா...! ஆடிப் பட்டம் தேடி விதைத்து விட்டு விவசாயிகள் ஆவணியில் பச்சையம்மனைத்தான் நாடி வந்து பயிர்காக்க வேண்டி, பொங்க விடுகிறார்கள். முத்துக்கருப்பு சிலை எதிரில் முன் செருப்பில் நின்றபடி பூசாரி



☛ கூரைப்பேட்டை அய்யனார் கோயிலில் தோட்டி சிலை

குறிசொல்வதுமுண்டு.

## தீப்பாய்ந்த நாச்சியார்!

தந்தை ஜமதக்னி முனிவரின் ஆணையின்படி மகன் பரசுராமரால் வெட்டிச் சாய்க்கப்பட்டார் அவர் தாயார் ரேணுகா தேவி. இந்தத் துயர நிகழ்ச்சி நெஞ்சை உருக்க, ரேணுகா தேவியின்பால் மக்கள் கொண்ட கனிவு மெள்ள பக்தியாக, அவரைத் தெய்வ நிலைக்கு உயர்த்தியுள்ளது. ரேணுகா தேவிக்குப் பூஜை செய்பவர்கள் மஞ்சள் துணியால் வாயை மூடிக் கொண்டு செய்ய வேண்டும் என்று ஒரு கட்டுப்பாடு. இதற்கான காரணமோ விளக்கமோ பெற இயலவில்லை.

ரேணுகா தேவியைப் போல், மகாபாரதத்தில் நியர் அவையில் துகிலுரிக்கப்பட்ட துரோபதையும் அம்மனாகப் பல இடங்களில் வழிபடப்படுகிறாள். விருத்தாசலம் சுற்று வட்டாரத்தில், தீப்பாய்ந்த நாச்சியார் கோயில்கள் என்று ஆறேழு இடங்களிலாவது உள்ளன. தீப்பாஞ்சாயி, தீப்பாஞ்சான் என்றெல்லாம் குறிப்பிடப்படும் இந்த தெய்வங்கள், தீயில் விழுந்து உயிர்துறந்த பெண்களின் நினைவுக் குறியீடுகள்தான்.

கிராம தேவதைகளைப் பற்றி டாக்டர் பட்டத்துக்காக ஆராய்ச்சி செய்துவரும் பேராசிரியர் த. வாசுதேவன், திட்டக்குடி வட்டாரத்தில் மட்டும் ஐந்து ஊர்களில் விளங்கும் வெவ்வேறு தீப்பாய்ந்த ஆயியரைப் பட்டியலிடுகிறார். தீப்பாய்ந்த ஆயியரின் நினைவாகக் குழந்தைகளுக்கு 'நல்லம்மாள்' என்று பொதுப் பெயர் இடும் வழக்கமும் உள்ளது.

## பாதுகையைச் சுற்றி நவகிரகங்கள்

சிதம்பரம் வட்டாரத்தில் உள்ள சேத்தியார் தோப்பைச் சேர்ந்த தாமோதர சேத்தியாரின் குடும்பத்தில் பல தலைமுறைகளுக்கு முன்னர் வாழ்ந்த பெண்மணி தீப் பாய்ந்ததன் நினைவாக ஒரு புங்க மரத்தின் அடியில் சிறிய கல் நடப்பட்டது. அதனை அக் குடும்பத்தாரே வழிபட்டு வந்தார்கள். அக் குடும்பத்துக்கு எங்கிருந்தோ வந்து சேர்ந்த ஒரு சிறு பெண் குடும்பத்தில் ஒருத்தியாய் வளர்ந்து வந்தாள். அவ் வீட்டின் பெரியவர் ஒருவர் இறந்த போது தானும் உயிர் விட முனைந்த அப் பெண்ணைத் தடுத்திருக்கிறார்கள். அவளோ, ''நீங்கள் நினைப்பது போல் நான் சாதாரண பெண் அல்ல. மஞ்சள், பூ, குங்குமம், எலுமிச்சம் பழம் ஆகியவற்றை மடியில் கட்டிக் கொண்டு தீயில் இறங்குகிறேன். அவை கருகியிருந்தால் நான் ஏமாற்றுக்காரி என்று எண்ணி அலட்சியப்படுத்தலாம்'' எனக் கூறித் தீயில் இறங்கினாளாம். மஞ்சள், பழம், குங்குமம் அப்படியே இருக்க, அப் பெண் மட்டும் கரைந்து போய் விட்டதாகச் சொல்கிறார்கள்.

தாமோதர சேத்தியார் குடும்பத்தைச் சேர்ந்த பூ. தா. ஜெயராமன் தமது மகனின் படிப்பு சம்பந்தமாய் இடையூறுகள் ஏற்பட்டுக் கலங்கி நின்ற போது, அவர் கனவில் தோன்றி தனக்குச் சின்னஞ்சிறு கோயில் எழுப்புமாறு கேட்டுக் கொண்டாளாம் இந்தத் தீப்பாய்ந்த ஆயி. வழிவழியாக ஸ்ரீ ராம பக்தியில் ஈடுபாடுடைய குடும்பம் என்பதால், அக்னிப் பிரவேசம் செய்த சீதா தேவியையே கோயில் கட்டிக் குடியேற்றி விட்டார்கள். பத்தொன்பது ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட இக் கோயில், முன்னர் வழிபட்டு வந்த புங்க மரத்தடி கல்லையொட்டியே அமைந்திருக்கிறது.

கையில் தாமரை மலருடன், நின்ற நிலையில் அருள்பாலிக்கும் சீதா லட்சுமிக்கு விமானம், சுற்றுக்கவருடன் கூடிய ஆலயம் இருக்கிறது. உற்சவ தேவதையாக ராம - லக்ஷ்மணர்களுடன் காட்சி தருகிறாள் சீதா தேவி. நித்திய பூஜைகள் உண்டு. ஸ்ரீ ராமரின் பாதுகையைச் சுற்றிலும் நவக்கிரகங்கள் நின்று வழிபடும் புதுமையான சிலையழகு காணப்படுகிறது.

சிதம்பரம் வட்டாரத்தில் மிகவும் சக்திவாய்ந்ததாக, நம்பிக்கைக்குரியதாகக் கருதப்படுகிறது இந்தத் தீப்பாய்ந்த நாச்சியார் கோயில்.

## அருள்பாலிக்கும் மணியோசை!

விருத்தாசலம் - கடலூர் சாலையில் சுமை வண்டிக்காரர்களும், கால்நடையாகப் போவோர் வருவோரும் நின்று, கற்பூரம் ஏற்றி வணங்கி விட்டுப் போகிற சுழட்டி



■ ஏ. குமாரமங்கலம் அய்யனார்

அய்யனார் கோயில் இருக்கிறது.

''ஆடி மாசம் பூசை போடுவோம்... அன்னைக்குச் சாயங்காலத்துக்குள்ளாற மேகமெல்லாம் சுழட்டிக்கிட்டு வந்து நாலு தூறலாச்சும் போடும்'' என்று இக் கோயில் பற்றி வெகு உற்சாகமாகக் கூறுகிறார் ஓர் உள்ளூர் அன்பர். மேகங்களைச் சுழட்டி மழை பொழியச் செய்வதால் சுழட்டி அய்யனார் என்ற பெயர் வந்ததோ...?

சுழட்டி அய்யனாரைப் போலவே, வழிப்போக்கர்களிடையே மிகவும் பிரபலமாகி விட்ட இன்னொரு கோயில் ஏ. குமாரமங்கலத்து அய்யனார் கோயில். உளுந்தூர்பேட்டை- சேலம் சாலையில் ஏழாவது கிலோ மீட்டரில் மிகவும் விரிவான சுற்றுச் சுவர் பரப்புக்கு இடையே உள்ளது இக் கோயில். இருபத்து நான்கு மணி நேரமும் இவ்வழியே செல்லும் சாரிசாரியான பஸ், லாரிகள் இங்கே நின்று சூடமேற்றி விட்டுத்தான் செல்லும். இறங்க நேரமில்லாத அவசரக்காரர்களுக்குப் பூசாரி மணியடித்துக் கடவுளின் அருள் கிடைக்கப் பண்ணுகிறார்.

இக் கோயிலில் நோய் தீர வேண்டிக் கொண்டவர்கள் நேர்த்திக் கடனாகச் செய்து வைத்த ஏராளமான பொம்மைகளைக் காண்கிறோம்.

## போலீஸ்காரருக்கும் சிலை!

பல கிராம தேவதைக் கோயில்களில் அய்யனார், குதிரை வீரன் சிலைகளுடன், தோட்டி, முனி, பாம்பாட்டி, காவலாள் என அன்றாட வாழ்க்கையோடு இயைந்துள்ள நபர்களுக்கும், நாய், மாடு போன்ற உதவிகரமான விலங்கினங்களுக்கும் சிலைகள் எடுத்து வழிபடுகிறார்கள். துப்பாக்கி, லத்தியுடன் நிற்கும் போலீஸ்காரர்களின் சிலைகள் கூட தென்னார்க்காடு மாவட்டத்தில் நிறைய உண்டு. இந்த வழிபாட்டு முறைகள் எளிய மக்களின் மேன்மையான உள்ளப் பாங்குக்குச் சான்றுகளாக விளங்குகின்றன.

இக் கோயில்களை ஊர் எல்லையில் அமைத்ததற்குக் காரணமும் சொல்லப்படுகிறது : உரல், உலக்கையால் இடிபடும் ஓசை கேட்காத தொலைவில் இவை இருக்க வேண்டும் என்று ஒரு சாத்திரம்.

மாலை நேரங்களில் வீட்டுப் பெண்கள் உரலில் இடிக்கவோ, அரைக்கவோ கூடாது என்று சொல்வார்கள். போக்குவரத்து மற்றும் இதர நவீன ஓசைகளற்ற அமைதியான கிராமப்புறங்களில் ஊரடங்கிய பின் இடித்தால் இந்தக் கோயில்கள் வரை அவ்வோசை கேட்கும் என்பதே இதற்குக் காரணமாயிருக்க வேண்டும்.

இதே பயபக்தியுடனான நம்பிக்கை காரணமாகத்தான் தங்கள் குலதெய்வமான கிராம தேவதைகளுக்குத் திருமண அழைப்புக்களில் முதலிடம் தருகிறார்கள் பலர். சாதி வேறுபாடு இன்றிச் சில ஊர்க்காரர்கள் 'தடிகொண்ட அய்யனார் துணை' என்றோ, 'வீரபத்திரசாமி துணை' என்றோ அழைப்பிதழின் முகப்பில் அச்சிடுகிறார்கள். திருமணம் முடிந்ததும் மாலையும் கழுத்துமாகக் கோயிலுக்கு ஓடோடி வருகிறார்கள். அபுதாபிக்கோ, அமெரிக்காவுக்கோ குடி பெயர்ந்தாலும் பிறக்கும் குழந்தைக்கு முதல் முறை முடியிறக்கக் குலதெய்வமான கிராம தேவதையின் கோயிலுக்கு வருகிறார்கள்.

## நகருக்குள் வந்த கிராம தேவதைகள்

கிராமத்திலிருந்து பட்டணத்துக்குக் குடிபெயர்ந்தாலும் தங்கள் வாழ்வின் ஓர் அங்கமாகி விட்ட தேவதைகளின் நினைவைச் சுமந்து சென்று தாங்கள் குடியேறும் பகுதியில் கோயில் அமைக்கிறார்கள். சென்னை மாநகரில், தமிழ்நாட்டின் எல்லா கிராம தேவதைகளுக்கும் இதைப் போன்ற எதிர்ப்பதியக் கோயில்கள் ஏற்பட்டு விட்டன.

வசதியும் மனப்போக்கும் அடையும் மாற்றத்தைப் பொறுத்து கிராம தேவதை கோயில்களுக்குக் கோபுரம், சுற்றுச் சுவர் என்று 'வசதிகள்' ஏற்பட்டு விடுகின்றன. இதனை 'மேல்நிலையாக்கம்' என்று குறிப்பிடுகிறார்கள்.

மிகப் பழமையான விருத்தாசலம் விருத்தீசுவரர் ஆலயத்தின் சுற்றுப் பிராகாரத்தில், உருட்டச் சிவக்க விழித்துக் கொண்டு, கையில் ஏராளமான ஆயுதங்களுடன் வீரபத்திர சாமியின் சுதைச் சிற்பம் இருக்கிறது. வீரபத்திரருக்கு ஒரு மண்டபமும் கட்டுவித்திருக்கிறார்கள். கிராம தேவதையை நகரத்துக்குள் கொண்டு வந்திருக்கிற அழகுக்கு இது ஒரு சான்று.

கட்டுரை, புகைப்படங்கள்:
சுப்ரபாலன்
வண்ணப்படம் : தம்பையா

## கனவு கண்ட காவலன்

விடை : ராம்சிங்தான் கனவு கண்டவர். அவர்தான் இறந்து விட்டாரே. அவர் கண்ட கனவு நமக்கு எப்படித் தெரியவரும்?
ஆதாரம் : 'புதிர்கள்' என்ற நூல்
தகவல் : வி. பன்னீர்செல்வன்

# காதலெனும் வானிலே

## முன்கதைச் சுருக்கம் :

மீரா அமெரிக்காவில் பிறந்து வளர்ந்த பெண். அவளை அமெரிக்கக் 'கலாசாரத்தி லிருந்து' காப்பாற்ற வேண்டும் என்று எண்ணி மீராவின் பெற்றோர் இந்தியாவுக்குக் குடிபெயர் கின்றனர்.

கலாசார மாற்றத்தால் திணறும் மீராவைப் புரிந்து கொண்டு உதவுபவர் ஆசிரியை மைதிலி ஜெயராமன்.

தன்னைக் குறித்த பயம்தான் தன் பெற் றோரை இந்தியாவுக்குக் குடிபெயரச் செய்தது எனத் தன் தந்தையின் நண்பர் மூலம் அறிந்து மீரா அதிர்ச்சியும் வேதனையும் அடைகிறாள். தன் பெற்றோருக்குத் தன்பேரில் நம்பிக்கை இல்லையா...? என்று கோபித்துக் கொண்டு அப்பாவிடம் சண்டை பிடிக்கிறாள்.

இந்தியாவில் மீரா பெறும் அனுபவங்கள் இந்நாடுதான் பாதுகாப்பானது என்பதாக அவ ளுக்கு உணர்த்தவில்லை. ஏன், ஆதர்சத் தம்பதி களாகத் தென்படும் அத்தைப் பாட்டியும் தாத்தா வும் கூடத் தங்கள் மகன் வேற்று ஜாதிப் பெண்ணைக் காதலித்து மணந்ததை ஏற்றுக் கொள்ளவில்லையே! அன்பே இல்லாத இந்தச் சமூகத்தைப் பாதுகாப்பானது என்று எண்ணு கிறாரே அப்பா...!

மீராவின் குழப்பங்களைப் புரிந்து கொள் ளும் இனிய நண்பனாக அமைகிறான் மைதிலி ஜெயராமனின் மகன் ஹரி. கண் பார்வையற்றவ னானாலும் தீர்க்கமாகச் சிந்திப்பவன்.

ஒருநாள் வகுப்புத் தோழி மீனாட்சியின் அம்மா மிஸஸ் செல்லப்பன் மீராவை உடனே வரச் சொல்லி அழைத்து, தன் மகளைப் பற்றி ஆசிரியை மைதிலி புகார் செய்வதைக் குறித்து அங்க லாய்க்கிறாள். மீனாட்சி யோக்கியமானவள் என்று சாதிக்கிறாள். ஆனால் அவ்வீட்டில் நடக்கும் சம்ப வங்கள் மிஸஸ் செல்லப்பன் யோக்கியமானவள் அல்ல என்று மீராவுக்கு உணர்த்துகின்றன.

ஒருவித அதிர்ச்சியுடன் அவள் வீடு திரும்ப, அத்தைப் பாட்டியும் தாத்தாவும் தங்கள் மகன் மருமகளுடன் அங்கு வந்துள்ளதைப் பார்க்கிறாள். மருமகள் யசோதாவைப் பார்த்து, 'இவளையா முதலில் ஏற்க மறுத்தார்கள்?' என்று வியக்கிறாள் மீரா.

---

## 11

"உங்க பாட்டியை நான் தப்புச் சொல்லமாட்டேன்'' என்றாள் யசோதா. ''பழமையிலே ஊறினவர்கள், வெளிக் காற்றுப் படாமல் வளர்ந்தவர்கள் அப்படித் தான் இருப்பார்கள்.''

யசோதா சரளமான ஆங்கிலத்தில் பேசி னாள். பேசியபடியே பரபரவென்று இஸ்திரி போடும்போது அவளுடைய வெண்மையான கையில் ஒரு ஒற்றைத் தங்க வளையல் மேலும் கீழும் நகர்ந்து, ஜன்னல் வழியே விழுந்த சூரிய வெளிச்சம் பட்ட தில் வர்ண ஜாலம் காட்டிற்று.

இவள் பேசும்போது தான் இடையில் புகுந்து பேசுவது அபஸ்வரமாக ஒலிக்கும் என்று மீராவுக்குத் தோன்றிற்று. இந்த இரண்டு நாட்களில் யசோதாவுக்கும் அவ ளுக்கும் இடையே ஏற்பட்டுப்போன நெருக்கம் அதிசயமானது. யசோதா அவளை விட பத்துப் பன்னிரண்டு வயது மூத்தவள். ஆனால் சம வயதுக்காரியுடன் பேசுவது போல் இருந்தது. யசோதாவின் தாய்மொழி மராத்தி என்பதால் அவள் மிகத் தயக்கத்துடனேயே, அதுவும் ஆங்கிலம் வராத அத்தைப் பாட்டியுடன் மட்டுமே தமிழ் பேசினாள்.

இஸ்திரி போட்ட ரவிக்கையை லாகவ மாக மடித்து மறுபடி அதன் மேல் ஒரு இழுப்பு இழுத்து, யசோதா மீராவைப் பார்த்து இலேசாகச் சிரித்தாள்.

''உனக்குப் புரிஞ்சுக்கறது கஷ்டம். இங்கே வளர்ந்தவங்களுக்குக் கடந்த காலத்தை மறக்கறது சுலபமில்லே. கடந்த காலம்னா, எத்தனையோ காலமா நாம சுமந்து வர்ற சரித்திரம், எண்ணம், நம்பிக் கைகள் - சட்டையை அவிழ்க்கிற மாதிரி அவிழ்க்க முடியாது. அவிழ்க்கப் பார்த் தோம்னா நிர்வாணமா நடுத்தெருவிலே தனியா நிற்கிற மாதிரி இருக்கும். அதுக்குத் துணிச்சல் வேணும். துணிச்சல் இருக்கிற வங்களுக்கும் பல தருணங்கள்லே தனிமைப்படுத்தபட்டுப் போனோம்ங்கற ஏக்கம் ஏற்படும்.''

மீரா யசோதவைச் சுவாரஸ்யத்துடன்

வாஸந்தி

பார்த்தாள். தனக்குத் தெரியாத உலகத்தைச் சேர்ந்தவள் இவள் என்று தோன்றிற்று.

''உங்களுக்கு அப்படிப்பட்ட ஏக்கம் இருந்ததா யசோதா?'' என்றாள் உத்வேகத்துடன்.

''ஆமாம்'' என்றாள் யசோதா, ''என்னைவிட வெங்கடேஷ் அதிகமாக் கஷ்டப்பட்டார். ஆசாரமான குடும்பத்திலே ரொம்பப் பாசமா வளர்ந்தவர். காதல் வசப்பட்டிருக்கும்போது அதுதான் ரொம்பவும் முக்கியமாத் தோணும். ஆனா அந்தக் காரணத்துக்காகப் பெத்தவங்களாலே நிராகரிக்கப் படும்போது கொஞ்ச காலத்துக்குக் கோபம் இருக்கும். பிறகு துக்கம் ஏற்படும். கடைசியிலே ஒரு குற்ற உணர்வு கூடத் தோணும். இந்தியச் சூழல்லே ஆணும் பெண்ணும் பிரியப்பட்டா மட்டும் போதாது. எல்லாருடைய சம்மதமும் இருந்தாத்தான் டென்ஷன் இல்லாம இருக்கும்.''

இவள் மறைமுகமாகத் தனக்கு உபதேசம் செய்கிறளோ என்று மீரா நினைத்தாள். ''எல்லார் சம்மதத்தையும் கேட்டுக் கொண்டா காதல் பிறக்கும்?''

''அதுதான் பிரச்னை, நமக்கே தெரியாமதான் அது பிறக்கும்,'' என்று யசோதா சிரித்தாள்.

இப்பொழுது அவள் ஒரு காவியத தலைவிபோல மீராவுக்குத் தோன்றினாள். 'உம், மேலே!' என்பது போல அவளைப் பார்த்து நகைத்தாள்.

''வெங்கடேஷும் நானும் ரொம்ப உக்கிரமா மேடையிலே விவாதம் செய்து கொண்டிருந்தபோது எங்கள் காதல் பிறந்தது.''

யசோதாவின் முகத்தில் திடீரென்று ஒரு மென்மை படர்ந்தது. பத்து வருஷங்கள் சர சரவென்று உதிர்ந்து போனது போல், ''நான் வேற பாஷை பேசறவள்னோ, வேற ஜாதின்னோ மனசிலே தோணவேயில்லே. கல்யாணம் செய்துக்கணும்னு தீர்மானிக்கும் போதுதான் அதெல்லாம் ஞாபகம் வந்தது. ஓ, அதுக்கப்புறம் நகர்ந்த நாட்கள் ரொம்ப கஷ்டமானவை, பெரியவங்க எதிர்ப்புனாலே.''

''பாட்டியும் தாத்தாவும் அப்படி நடந்திண்டதை என்னாலே நம்பமுடியல்லே.''

''நான்தான் சொன்னேனே, அவங்களுடைய நம்பிக்கை அது. அதைக் கேள்வி கேக்க எனக்கு உரிமையில்லை.''

''இப்ப எப்படி சமாதானமாச்சு?''

''இப்பவும் சமாதான மாயிட்டாங்களான்னு எனக்குத் தெரியாது. ஆனா இப்ப விரோதம் இல்லேன்னு நினைக்கிறேன்.''

விரோதம் என்ற வார்த்தை மிகவும் கடுமையானது என்று மீரா நினைத்துக் கொண்டாள். நம்ப இயலாமல் தலை யசைத்துச் சிரித்தாள். ''விரோதம் எதுக்கு? 'காதலர்களை உலகமெல்லாம் காதலிக்கும்'னு ஷேக்ஸ்பியர் சொல்லியிருக்கார்.''

''காதலர்களுடைய குடும்பங்களைத் தவிர!'' என்றாள் யசோதா புன்னகையுடன்.

**மீ**ரா பேசாமல் யசோதாவைச் சற்று நேரம் கவனித்தாள். யசோதா பேசும்போது கண்களில் ஒரு அசாதாரணப் பிரகாசம் தெரிந்தது. யாரையும் கவரக்கூடிய வசீகரம் இருந்தது. வெங்கடேஷ் இவளிடம் காதல் கொண்டதில் ஏதும் வியப்பில்லை என்று தோன்றிற்று. இவளை நேரில் காணாமலேயே இவளுடைய ஜாதிக்காகவும் மொழிக்காகவும் வெங்கடேஷின் பெற்றோர்கள் நிராகரித்தது, இப்பவும் விளங்காதது மட்டுமில்லை அநியாயமாகப் பட்டது.

''இதனாலே உங்க ரெண்டு பேருக்கும் தாத்தா பாட்டிகிட்ட விரோதம் ஏற்பட்டதா?''

''விரோதமில்லே, வருத்தம். அவங்களுடைய சினேகிதம் வேணும்னு நா ஆசைப்பட்டேன். அவங்களுக்கு அதிருப்தியைக் கொடுத்துட்டோம் என்கிறது மனசுக்குள்ளே எப்பவும் ஊசி முனைக்குத்தல் போல இருக்கும். கொஞ்சம் விட்டுக் கொடுத்தா என்னன்னு தோணும். சின்ன வயசிலேயே என் அம்மா இறந்து போனார். அம்மாவுடைய பிரியம் எல்லாம் எனக்கு ஞாபகம் கூட இல்லே. அது ஒரு அனுபவ சூன்யம்னு தோணும். வெங்கடேஷ் எப்பவாவது அவங்க அம்மாவைப் பத்திப் பேசுவார். அவருக்குள்ளே இருக்கிற அந்த ஞாப



கம் ஆழமானது; சந்தோஷமானது என்று புரியும்போது எனக்கும் ஏக்கமா இருக்கும்.''

''வேடிக்கை, யசோதா!'' என்றாள் சினேகிதமாக. ''உங்களுடைய காதலுக்குத் தாத்தாவும் பாட்டியும் எதிர்ப்புக்காட்டினது அவங்களுடைய இயல்புக்கு விரோதம். அவங்க ரெண்டு பேருக்கும் நடுவிலே இருக்கிற நெருக்கத்தைப் பார்த்து நான் ரொம்ப ஆச்சரியப்படுவேன். கல்யாண மாகி ஐம்பது வருஷமாச்சாம். இப்பவும் அவங்களால் ஒருத்தரை விட்டு ஒருத்தர் இருக்க முடியாதுன்னு நினைக்கிறேன்.''

''ஆமாம், ரொம்ப நெருக்கம்.... வாழ்க்கை நிறைய முரண்பாடுகள் கொண்டது மீரா!''

தன்னிடம் பேசும் இந்தப் பேச்சையெல்லாம் இவள் இந்தக் குடும்பத்தைச் சேர்ந்த வேறு பெண்களிடம் பேசியிருக்க மாட்டாள் என்று மீரா நினைத்துக் கொண்டாள். வேறு கலாசாரத்தைச் சேர்ந்த மூன்றாம் மனுஷி என்கிற எண்ணத்தினாலேயே மற்றவர்களிடம் சொல்ல முடியாததைத் தன்னிடம் சொல்கிறாள்.

''எப்படியோ, மறுபடி இப்பத் தொடர்பு ஏற்பட்டுப் போச்சே, அது சந்தோஷமான விஷயம். எப்படி ஏற்பட்டது?''

''மூணு மாசத்துக்கு முந்தி வெங்கடேஷுக்கு டைபாய்டு ஜுரம் வந்திருந்தது. ஜுர வேகத்திலே ஒரு நாள் அம்மாவைப் பார்க்கணும்; அப்பாவைப் பார்க்கணும்னு அனத்திக்கிட்டே இருந்தார். அப்ப இவர்களுக்குத் தந்தி அடிச்சேன். வரமாட்டார்களோன்னு கவலையா இருந்தது. வரோம்னு பதில் வந்ததும், நீ நம்ப மாட்டே, வாழ்க்கையிலே எனக்குக் கிடைச்ச ரொம்ப பெரிய வெற்றி போல சந்தோஷமேற்பட்டது. அவங்க வந்த சந்தோஷத்திலேயே வெங்கடேஷுக்குச் சீக்கிரம் குணமாயிட்டதுன்னு நினைக்கறேன்.''

மீராவின் கண்களில் நிறைந்திருந்த நீரைக் கண்டு யசோதா மெல்லச் சிரித்து அவள் கன்னத்தைத் தட்டினாள், சமாதானமாக. ''இப்ப ஒண்ணும் பிரச்னையில்லே.''



தென்னிந்திய கோவில்களைப் பார்க்க வேண்டும் என்று அவர்கள் இரண்டே நாட்களில் கிளம்பிச் சென்றபோது மீராவுக்கு ஏமாற்றமாக இருந்தது. அத்தைப் பாட்டியும் தாத்தாவும் கூட கிராமத்துக்குக் கூடவே கிளம்பி விட்டார்கள். 'மூணு மாசமா வீடு பூட்டியிருக்கு, வெங்குட்டுவும் யசோதாவும் அங்க வர்றதுக்குள்ளே வீட்டைத் துப்புரவாக்கி வெக்கணும்' என்று பாட்டி அவசரப்பட்டாள். பாட்டியுடன் விரிவாகப் பேசச் சந்தர்ப்பம் கிடைக்காமல் போனது மீராவுக்கு வருத்தமாக இருந்தது. பாட்டியிடம் எக்கச்சக்கமான கேள்வி எதையும் கேட்டுச் சங்கடப்படுத்தக் கூடாது என்று அம்மா வேறு மிகக் கண்டிப்புடன் சொல்லியிருந்தது அவளைக் கட்டுப் படுத்தியது. இருந்த போதிலும் பாட்டியைத் தனியாகச் சந்திக்க நேர்ந்த சொற்ப நேரத்தில் ''யசோதா ரொம்ப நல்ல பொண்ணு பாட்டி'' என்றாள்.

''நல்ல பொண்ணுதான். யார் இல்லேங்கறது? என்ற பாட்டியின் குரலில் ஒரு ஆற்றாமை இழையோடிற்று.

''அதுதான் பாக்கி எல்லாத்தையும் விட முக்கியம் பாட்டி - இல்லையோ?''

பாட்டி சடக்கென்று திரும்பி அவளைத் தீர்க்கமாகப் பார்த்தாள்.

''முக்கியம்தான். ஆனா அதைவிட முக்கியமானதுன்னு சில விஷயங்களை எத்தனையோ காலமா நம்பிண்டு வந்திருக்கோம்டி குழந்தை - அதையெல்லாம் மாத்திக்க முடியல்லே. என்ன செய்யட்டும்?''

பாட்டியே அதற்காக வருத்தப்படுகிறாள் என்று தோன்றிற்று. இது மூர்க்கத்தனம் இல்லை, ஒரு இயலாமை என்பது போல தொனித்தது. ஆனால் பாட்டி சமையலறையில் இருக்கும் போதோ சாப்பிடும் போதோ யசோதா அருகில் வரவில்லை என்பதை மீரா கவனித்தாள். யசோதா தொட்டதைப் பாட்டி சாப்பிடமாட்டாள் என்கிற உண்மை தெரிந்தபோது மீண்டும் மீண்டும் மனசு அதிர்ந்தது, தனக்கே நேர்ந்த அவமானம் போல்.

'சமாதானமாகி விட்டார்களான்னு



● ஈரோடு நகரில் ஒரு ஓட்டலின் பெயர் மாமன் உணவு விடுதி.

● ஒரு டிராவல்ஸின் பெயர் : குரங்கு டிராவல்ஸ்.

● ஒரு தெருவின் பெயர் : பாவாடை தெரு

● ஓடும் பஸ் ஒன்றின் பெயர் : காகம்

- ஈரோடு அனுராதா

---

தெரியாது' என்று யசோதா சொன்னதற்கு இதுதான் காரணமாக இருக்க வேண்டும் என்று தோன்றிற்று.

அவர்கள் கிளம்பிச் சென்ற இரண்டு மூன்று நாட்களுக்கு, 'அவ தொட்டா என்ன, அவ சமைச்சதைச் சாப்பிட்டா என்ன', என்ற கேள்விகளால் அம்மாவைத் துளைத்து எடுத்ததில், அம்மாவுக்குக் கோபம் வந்தது. அம்மா பேச விரும்பாத விஷயம் அது என்று மீரா நினைத்துக் கொண்டாள். 'இதுக்கெல்லாம் சமூக, சரித்திர காரணங்கள் இருக்கு' என்றாள், அம்மா கடைசியில் நிதானமாக. ''கவலைப் படாதே. சமூகம் வேகமா மாறிண்டிருக்கு. முன்னே இருந்த ஜாதிக்கட்டுப்பாடெல்லாம் இப்போ ரொம்பக் குறைஞ்சு போச்சு, அத்தை இந்த அளவுக்கு மாறினதே பெரிய விஷயம்னு எடுத்துக்கோ.''

மீராவுக்குச் சமாதானமாகவில்லை. பாட்டியின் மாறுதல் உணர்வு பூர்வமாய் வந்தது. அறிவு பூர்வமாய் வராத வரையில் அவள் மாறி விட்டதாக எடுத்துக் கொள்ள முடியாது என்று சொல்ல வேண்டும் போல் இருந்தது. ஆனால் அம்மாவின் பொறுமை நழுவிப் போயிருந்ததைக் கண்டு வாயை மூடிக் கொண்டாள்.

''நா வேற ஜாதிக்காரனைக் காதலிச்சா நீ என்ன செய்வே?'' என்றாள் சற்றுப் பொறுத்து.

அம்மா சட்டென்று நிமிர்ந்தபோது கண்களில் திகைப்புத் தெரிந்தது. மீரா சிரித்தாள்.

''யாரும் இன்னும் அகப்படலே எனக்கு, அப்படி ஒரு சந்தர்ப்பம் வந்ததுன்னு வெச்சுக்கோ, பாட்டி மாதிரி நடந்துப்பியா?''

''பாட்டி மாதிரி நான் ஏன் நடந்துக்கணும்? பாட்டி பதினாறு வருஷம் அமெரிக்காவிலே இருந்தாளா?''

மேற்கொண்டு விவாதத்தை வளர்த்த இஷ்டமில்லாமல் அம்மா சாதுர்யமாகப் பேச்சை மாற்றினாள். அன்று அப்பா அரை குறையாகத் தான் அமெரிக்கக் கலாசாரத்தைக் கண்டு பயந்து போனதாகச் சொன்னது நினைவுக்கு வந்தது. அது என்ன பயம் என்று இதுவரை அவளுக்குப் புரியவில்லை. அமெரிக்கனை அவள் காதலித்தால் என்ன செய்வது என்று அவர் பயந்திருந்தால் இவர்களுக்கும் பாட்டிக்கும் அதிக வித்தியாசமில்லை என்று அவள் தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

தன் மனக்குழப்பங்களையெல்லாம் ஹரி புரிந்து கொள்வான் என்று அவளுக்கு விநோதமாகத் தோன்றிற்று. அவனுடன் பேசினால் தெளிவு ஏற்படலாம்.

ஆனால் அதற்கடுத்த நாட்களில் மாற்றி மாற்றி வகுப்பில் திடீர் பரீட்சைகள் வைக்கப்பட்டதால் வேறு சிந்தனைக்கே இடமில்லாமல் போயிற்று.

வெள்ளிக்கிழமை மாலை பரீட்சையெல்லாம் முடிந்து போன நிம்மதியுடன் ஒரு பாட்டை முணுமுணுத்தபடி அவள் பஸ் நிலையத்தை நோக்கிச் சாவகாசமாக நடந்த போது, அவளைத் தாண்டிச் சென்ற ஒரு கார் சற்று நின்று பின்னால் நகர்ந்து வந்தது. பின் ஸீட்டில் மீனாட்சி அமர்ந்திருந்தாள். முன் ஸீட்டில் இரண்டு இளைஞர்கள் அமர்ந்திருந்தனர்.

''ஹாய்!'' என்றாள் மீரா பொதுவாக.

''ஏறிக்கோ'' என்றாள் மீனாட்சி. ''உன்னை இறக்கிவிடறோம்!''

''ஓ.கே, தாங்க்ஸ்!'' என்று மீரா ஏறிக் கொண்டாள்.

மீனாட்சி அவர்களை 'சங்கர், மணி' என்று அறிமுகப்படுத்தினாள். அவர்கள் யார் என்று சொல்லவில்லை. மீனாட்சியிடம் இதுவரை தான் அவளுடைய வீட்டுக்குச் சென்று அவளுடைய அம்மாவுடன் பேசியதைப் பற்றிச் சொல்லவில்லை என்று மீராவுக்கு ஞாபகம் வந்தது. ஆனால் சொல்ல வேண்டிய அவசியமுமில்லை என்றும் தோன்றிற்று.

''சங்கர், பார்ட்டிக்கு ஒரு பார்ட்னர் வேணும்னு சொல்லிக்கிட்டிருந்தியே, மீராவைக் கூப்பிட்டுக்கயேன்'' என்றாள் மீனாட்சி.

''என்ன பார்ட்டி?'' என்றாள் மீரா வியந்து.

முன்னால் இருந்தவன் அவளைத் திரும்பிப் பார்த்துப் புன்னகைத்து, ''ஒரு கெட்டுகெதர் பார்ட்டி'' என்றான். ''நாளைக்கு உன்னாலே வர முடியுமா?''

அவனுடைய முகம் பரிச்சயமானதாகத் தோன்றிற்று. ஆனால் யார் என்று நினைவு வரவில்லை.

''நாளைக்குச் சாயங்காலம் டான்ஸ் கிளாஸ் இருக்கே?'' என்றாள்.

''காலையிலேதான் பார்ட்டி'' என்றான் அவன்.

(தொடரும்)



# சொல்லாமல்

**வா**சலில் வண்டி வந்து நின்ற சப்தம் கேட்டு விரைந்து போய்க் கதவைத் திறந்தாள் கோமதி.

எதிர்பாராத மகிழ்ச்சி.

மாப்பிள்ளை உமேஷ் வீணாவுடன் வந்திருந்தார். வீணாவின் அப்பா மூர்த்தி இன்னும் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. மகள் வந்திருக்கும் செய்தியை வாயிற்படியிலிருந்தே உரத்த குரலில் அஞ்சல் செய்தாள் கோமதி.

மதுரையைச் சுற்றி உமேஷுக்குப் பத்து நாள் அலுவலகச் சுற்றுப் பிரயாணத் திட்டம் இருந்தது. வீணாவும் தன் வீட்டாருடன் இருக்கட்டும் என்ற எண்ணத்தில் அவளையும் கூட்டி வந்திருந்தான்.

மாப்பிள்ளை குளித்துச் சாப்பிட்டு விட்டு வெளியே போய்விட்டார். தான் இரவு திரும்புவது நிச்சயமில்லை என்பதால் தனக்காக யாரும் காத்திருக்க வேண்டாம் எனச் சொல்லிவிட்டுப் போயிருந்தார்.

பகல் சாப்பாட்டிற்குப் பிறகு கோமதி பெண்ணிடம் அவள் புக்ககத்தைப் பற்றி விசாரித்தாள். முக்கியமாக அவள் மாமியாரைப் பற்றி.

''அதைப் பற்றித்தான் நானே உன்னிடம் சொல்ல வேண்டும் என்று இருந்தேன்!'' எனத் தொடங்கினாள் வீணா.

''கல்யாணமாகி அந்த வீட்டிற்கு நான் போய் ஒரு வருஷம் ஆகப் போகிறது. நானும் பொறுத்துப் பொறுத்துப் போய் விட்டேன். இனிமேல் என்னால் முடியாது.''

''என்னடி சொல்கிறாய்! உன்னை ரொம்பவும் கோபித்துக் கொள்கிறார்களா?''

''அதை எப்படிச் சொல்வது என எனக்குத் தெரியவில்லை. நம் வீட்டைப் போல இல்லை. அங்கே எல்லாம் நேர் எதிர். தலை கீழ், என் மாமனார் மாமியாருக்குச் 'சலாம்' போடாத குறை ஒன்றுதான். எதற்கெடுத்தாலும் 'எஸ் மேடம்' தான். காலையில் 'ஷேவ்' செய்து கொள்ளக்கூட மாமியாரிடம் கேட்டுக் கொண்டு தான் செய்கிறார் என்றால் பார்த்துக் கொள்ளேன்.''

கோமதி சிரித்தாள்.

''சிரிக்காதே அம்மா.... எனக்குப் பற்றிக் கொண்டு வருகிறது. உன் மாப்பிள்ளை இருக்கிறாரே - நான் அவர் அம்மாவைப் பற்றி ஏதாவது சொல்ல ஆரம்பித்தால் காது செவிடாகப் போகும், முகத்தில் கொஞ்சம் கூட மாறுதல் இருக்காது.

''உன் மாமியார் அப்படி உன்னை என்னம்மா செய்கிறாள்? பார்ப்பதற்கும் பழகுவதற்கும் நன்றாகத்தானே தெரிகிறார்?''

''அதெல்லாம் நாலு பேருக்கு எதிரே... தனியா இருக்கும் போது...''

''ஏதாவது கண்டபடி பேசுகிறாளா?''

''பேசினால் சும்மா இருப்பேனா! பதிலுக்குப் பதில் கொடுத்து விடுவேன்!''

''அப்புறம்!''

''நான் என்ன செய்தாலும் திருப்தி இல்லை. ஒரு காப்பி டம்ளரை அலம்பி வைத்தாலும் சரியாக இருக்கிறதா என எடுத்துப் பார்க்கிறார். இடுப்பு ஒடிய வீடு துடைத்தால் எங்கோ ஒரு மூலையில் கொஞ்சம் விட்டுப் போய்விட்டது என்று.....''

''சொல்லிக் காட்டுகிறாளா?''

''அப்படிச் செய்தால் தேவலையே. நானே போய் ஓர் இழுப்பு இழுத்துவிட்டு வந்து விடுவேனே. தான் போய் உட்கார்ந்து அதைத் துடைத்துவிட்டு என்னை ஒரு மாதிரியாகப் பார்க்கிறார். அதைத்தான் தாங்க முடியவில்லை.''

''இதெல்லாம் சின்னச் சின்ன சமாசாரம் வீணா. பத்து விரலும் ஒரு மாதிரியா இருக்கும்?''

''என்ன சின்ன சமாசாரம்! நீ சுலபமாகச் சொல்லி விட்டாய்! ஒவ்

# சொல்லி

வொரு வேலையும் செய்து முடித்த பிறகு மாமியார் குற்றம் கண்டுபிடிக்காமல் இருக்க வேண்டுமே எனப் பயந்து பயந்து சாக வேண்டியிருக்கு. சின்ன வயசிலே - பள்ளிக் கூடத்திலே வாத்தியாரம்மாவிடம் ஸ்லேட்டைக் கொடுத்து விட்டுக் கையைக் கட்டிக் கொண்டு நிக்கறது மாதிரி. சே!''

''பாவம்டி... அவளுக்கும் வயதாகி விட்டது. இன்னும் எத்தனை நாள்...''

''ஏம்மா! நான் மட்டும் என்ன அப்படியே குமரியாக இருந்து விடப் போகிறேனா? நான் என்ன அடிமையா? என்னை விலைக்கு வாங்கி விட்டார்களா?''

''கோபப்படாதே அம்மா! இதெல்லாம் வீட்டுக்கு வீடு சகஜம்! உன் பாட்டிகிட்ட நான் கேட்காத பேச்சா! வாங்காத திட்டா?''

''அதெல்லாம் அந்தக் காலம் அம்மா... நான் இப்போ ஒரு முடிவோடு தான் புறப்பட்டு வந்திருக்கிறேன்.''

''என்னடி என்னென்னவோ சொல்லிப் பயமுறுத்துகிறாய்?''

''உன் மாப்பிள்ளை அங்கே தனிக்குடித்தனம் செய்ய வீடு பார்க்க வேண்டும். இல்லா விட்டால் வேறே ஊருக்கு மாற்றல் கேட்க வேண்டும்? அது வரை நான் திரும்பிப் போகப் போவதில்லை.''

''அவரிடம் சொல்லி விட்டாயா?''

''உம்... பூம் பூம் மாடு போல் தலையாட்டி இருக்கிறார். என்ன செய்கிறார் பார்க்கலாம்!''

''அவசரப்படாதேடி வீணா! அவ்வளவு தான் நான் சொல்வேன்!'' என்றாள் கோமதி பெருமூச்சு விட்டபடி.

மகளைப் பற்றிக் கவலைப்பட்டதாலோ என்னவோ கோமதிக்கு இரவு கடும் தலைவலி. காலையில் நல்ல ஜுரம். எழுந்து நிற்கக் கூட முடியவில்லை.

'மாப்பிள்ளை வேறு வந்திருக்கிறார். நான் படுத்து விட்டால் எப்படி?' என எழுந்திருக்க முயன்றாள் கோமதி. உடல் தள்ளாடியது.

வீணா தாயைக் கட்டாயப்படுத்திப் படுக்க வைத்தாள். ''நீ அலட்டிக் கொள்ளாமல் இரு. நான் எல்லாம் பார்த்துக் கொள்கிறேன்'' என்றாள்.

காலை முதல் மாலை வரை அவள் பம்பரமாகச் சுழன்றாள். வீட்டைத் துடைத்துப் பெருக்கி, ஒரு பொட்டு தூசி கூட இல்லாமல் சுத்தமாக்கினாள். அத்தனை துணிகளையும் துப்புரவாகத் தோய்த்துப் பிழிந்து, சுருக்கம் இல்லாமல் உதறி உலர்த்தி, பின்னர் பெட்டி போட்டு மடித்து வைத்தாள். ஜன்னல், கதவு நிலைகளுக்குப் புதுத் திரைச் சீலை மாற்றினாள். கழற்றியதை ஊற வைத்துத் தோய்த்து உலர்த்தினாள். மாட்டப்பட்டிருந்த படங்கள் - ஸ்வாமி அலமாரி, ஷோகேஸ் பொம்மைகள் எல்லாவற்றையும் புதிது போல் துடைத்து வைத்தாள். வெள்ளிக் குத்து விளக்கை மெருகேற்றியது போல் தேய்த்து விளக்கேற்றினாள்.

அப்பாவுக்கும் கணவனுக்கும் பிடித்த சிற்றுண்டி தனித்தனியாகத் தயார் செய்

அன்னம்

''நடடா ஸ்டேஷனுக்கு, திருட்டு ராஸ்கல்.''
''சினிமாவுல, வர்ற மாதிரி, 'யூ ஆர் அண்டர் அரெஸ்ட்'னு' காது குளிர சொல் லுங்களேன் எசமான்...''
- ஆர். வசந்தகுமார்





தான். நடுநடுவே காப்பிக் கொட்டை அரைக்க, கறிகாய் வாங்க, லாண்டிரிக்குத் துணி போட போய் வந்தான்.

இதைத் தவிர காலையில் எழுந்து காப்பி போடுவதிலிருந்து இரவு சாப்பாடு முடிந்து சமையல் அறையைக் கழுவி விடுவது வரை தானே செய்தாள். இத்தனை செய்தும் நெற்றி குங்குமம் வியர்வையில் கலையவில்லை. முகத்தில் சோர்வு தெரியவில்லை.

மூர்த்தி கூடக் கோமதியிடம் வேடிக்கையாகச் சொன்னார். ''கோமதி... இன்னும் கொஞ்ச நாள் படுக்கையிலேயே இரு. உன் சமையல் அலுத்துப் போச்சு.. இந்த மாதிரி வாய்க்கு ருசியாகச் சாப்பிட்டு எத்தனை நாள் ஆச்சு!''

ஐந்தாம் நாள். காலை. கோமதி எழுந்து உட்கார்ந்து விட்டாள்.

மறுநாள் மாப்பிள்ளை ஊர் திரும்ப வேண்டும். ''ஸ்வீட்'' செய்து கொடுக்க வேண்டாமா? சமையற்கார அம்மாளுக்குச் சொல்லி அனுப்பினாள்.

''அதெல்லாம் வேண்டாம். நான் செய்து தருகிறேன்'' என்றாள் வீணா.

அரைமணி நேரத்தில் வாயில் கரையும்படி மைசூர்பாகு!

**அ**ன்றிரவு.

கோமதி மெதுவாக மகளிடம் கேட்டாள்.

''அப்போ... நாளைக்கு மாப்பிள்ளை மட்டும்தான் ஊருக்குப் போகிறாரா?''

''ஆமாம். நான்தான் அன்றைக்கே தீர்மானமாகச் சொல்லி விட்டேனே.''

''சரி... வீணா... நான் ஒன்று சொல்லட்டுமா?''

''ஒன்று என்ன? நூறு வேண்டுமானாலும் சொல்... மாமியாருடன் ஒத்துப் போ என்பது மட்டும் வேண்டாம்!''

''சரி அம்மா! உன் குடும்ப சமாசாரம்... நான் எதற்குத் தலையிடப் போகிறேன்? நீ கல்யாணம் ஆகிப் போவதற்கு முன் ஒருநாள் காப்பி போட்டிருக்கிறாயா? ஒருநாள் சமைத்திருப்பாயா? வீட்டைப் பெருக்கித் துடைத்திருப்பாயா? காலேஜ், படிப்பு, சிநேகிதி பட்டாளம் - இதுதானே?''

''ஆமாம்.. அதற்கென்ன?''

''ஆனால் இந்த ஐந்து நாட்களாக நான் இல்லாமல் தனியாக எல்லோரும் மெச்சற மாதிரி வீட்டைப் பார்த்துண்டியே... அது எப்படி?''

வீணா மௌனம் சாதித்தாள்.

''காரணம் உன் மாமியார் தாண்டி, அசடே! உனக்கு எல்லாம் நல்லபடியாகச் சொல்லிக் கொடுத்திருக்கிறாள். நாளைக்கு யார் உதவியும் இல்லாமல் ஒரு குடும்பத்தை நிர்வாகம் பண்ணக் கத்துக் கொடுத்திருக்கா. ஏன் நீ அவளை அந்நியமா யாரோன்னு நெனைக்கிறே. அது உன் வீடு என்கிற மனோபாவத்தை நீ வளர்த்துக்கலே...''

''அம்மா...''

''வீணா! பள்ளிக்கூடப் படிப்பை வைத்துக் கொண்டு மட்டும் காலம் தள்ள முடியாது. அனுபவ அறிவு வேண்டும். அதைக் கற்றுக்கப் பொறுமையும் வேண்டும். உன் மாமியார் உன்னைத் தரக் குறைவாகப் பேசியோ, ஏசியோ வேறு விதமாக அவமானப்படுத்தியோ இருந்தால், உனக்காக வாதாட நான்தான் முதலில் நிற்பேன். ஆனால் இப்போது உன் மாமியாரை நினைத்து நான் பெருமைப் படுகிறேன்.''

வீணா பதில் சொல்லவில்லை. செயலில் காட்டினாள். மறுநாள் உமேஷுடன் ஊருக்குப் புறப்பட்டுப் போனாள்.

**அ**வளை ரயிலேற்றி விட்டு வந்த பிறகு மூர்த்தி கோமதியிடம் மெதுவாகக் கேட்டார்.

''ஒரு சந்தேகம் கோமதி... நிஜமாகவே உனக்கு உடம்பு முடியவியா?''

கோமதி சிரித்தாள். ''நிஜத்தைச் சொல்லப் போனா முதல் நாள் மட்டும்தான் முடியலே... அப்புறம்...''

''எனக்குத் தெரியும்... அதனால்தான் கேட்டேன்!'' என்றார் மூர்த்தி.

''கடன் தொல்லை தாளாமல் தற்கொலை செஞ்சுக்கிட்டவரோட ஆவி ஒண்ணு உங்க வீட்டில் சுத்திக்கிட்டிருந்துச்சே!''

''ஊம்... அதெல்லாம் முன்னாடி; ஈட்டிக்காரரோட படத்தை ஃபிரேம் போட்டு மாட்டினதும் நடமாட்டம் நின்னுடுச்சு!''

- வேதபுரி. எஸ். ரமேஷ்



# "லில்லி உள்பாவாடைகள்"

தயாரிப்பாளர்

**கரூர்.**

## P. R. C. கார்மெண்ட்ஸ்சாரின்

## பெண்களுக்கான ஓர் அரிய பரிசுப் போட்டி

## 'முதல்வர் நேரில் சென்று வழங்கினார்'

### சாராய வேட்டையில் காயமுற்ற

## போலீஸ்காரருக்கு ரூ. 10 ஆயிரம் பரிசு

*சென்னை, டிச. 8 : - சென்னையில் வெள்ளியன்று காவல் துறையினர் நடத்திய கள்ளச் சாராய வேட்டையின்போது, துணிச்சலாக செயலாற்றி சாராயம் கடத்திய வேனை நிறுத்திய போலீஸ்காரர் ராமருக்குத் தமிழக முதல்வர் செல்வி ஜெயலலிதா இன்று ரூ. 10 ஆயிரம் வெகுமதியை அளித்தார்.*

*காயமுற்ற ராமர் அனுமதிக்கப்பட்டுள்ள ஸ்டான்லி மருத்துவ மனைக்குச் சென்று அவரை முதல்வர் செல்வி ஜெயலலிதா பார்த்தார்.*

*ராமருக்குத் தேவையான அனைத்து மருத்துவ வசதிகளையும் அளிக்கு மாறு மருத்துவமனைத் தலைவரைக் கேட்டுக் கொண்டார்.'*

மேலே காணப்படும் பத்திரிகைச் செய்தியை ஆங்கிலத்தில் மொழி மாற்றம் (Translation) செய்யப்பட வேண்டும். மிகச் சரியாக மொழி மாற்றம் செய்து அனுப்பி வைப்பவர்களில் நூறு (100) பெண்கள் மட்டும் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இதில் எமது நிறுவ னத்தின் முடிவே இறுதியானது.

அவ்வாறு தேர்ந்தெடுக்கப்படும் ஒவ்வொரு பெண்மணிக்கும் ரூபாய் 82/- (Normal Size) (எண்பத்தி இரண்டு) மதிப்புள்ள தரமான வடிவமைப்பில் சிறந்த இரண்டு 'லில்லி' உள்பாவாடைகள் பரிசாக அனுப்பி வைக்கப்படும்.

இப்போட்டியில் பெண்கள் மட்டுமே கலந்து கொள்ளலாம்.

மொழிமாற்ற வரைவுகள் (Translated Drafts) எமது நிறுவனத்திற்கு வந்து சேரவேண்டிய கடைசி நாள் : 27. 01. 1992.

எமது நிறுவனத்தின் முகவரி : ☎ 21946

## P. R. C. கார்மெண்ட்ஸ்,

**தயாரிப்பாளர் : 'லில்லி' உள்பாவாடைகள்**

26, பிரதட்சணம் ரோடு, A-PLOT, கரூர் - 639 002.

இது ஒரு சுயவேலை வாய்ப்பு நிறுவனம். பாரதப் பிரதமர் அவர்களின் 'படித்த இளைஞர்களுக்கான சுயவேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் கரூர் கிளை 'கனரா வங்கியின்' சீரிய பொருளாதார உதவியுடன் மிகச்சிறப்பாக செயல்படும் நிறுவனங்களில் ஒன்றாகும்.

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## ஜனவரி 16, 1942

### காந்திஜியின் கடிதம்

மகாத்மாஜியின் கடிதம் ஒன்றை எதிர்ப் பக்கத்தில் வெளியிட்டிருக்கிறோம். ''அஹிம்சையா? அரசியலா? - '' என்னும் கட்டுரையை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து மகாத்மாஜிக்கு அனுப்பியிருந்தோம். அதற்கு மகாத்மாவிடமிருந்து கிடைத்த பதில்தான் எதிர்ப்பக்கத்தில் பிரசுரமாகியிருக்கிறது.



10-9-41

Dear Krishnamurthy,

I like your suggestion that leaders should meet & deliver their considered judgment. You put words into the mouths of the masses. Are they not dumb? But as to your suggestion I can do nothing mechanically. God's will be done.

Yours ...

MKGandhi

ஆங்கில மொழி பெயர்ப்பில் ஒரு தவறு செய்யப்பட்டிருந்தது. ''பொது ஜனம்'' என்பதை, "Masses" (பாமர ஜனங்கள்) என்று மொழி பெயர்க்கப்பட்டிருந்தது. ''பொதுஜனம்'' என்று நாம் சொல்லும்போது அரசியல் பிரச்னைகளைப் பற்றிச் சிந்திக்கக் கூடிய மனுஷ்யர்களைத்தான் குறிப்பிடுகிறோம். வாயில்லாப் பூச்சிகளான பாமர ஜனங்களின் மனத்தை அறியும் சக்தி நமக்குக் கிடையாது. அவர்களுடைய, இருதயத்தை அறியும் ஆற்றல் மகாத்மாவுக்குத்தான் உண்டு.

இன்னும், கட்டுரையின் மொழி பெயர்ப்புடன் காந்திஜிக்கு நமது ஆசிரியர் எழுதிய கடிதத்தில், அஹிம்சா தர்மத்தில் பரிபூரண நம்பிக்கையுள்ளவர்களை மாகாணத்துக்கு ஒருவர் வீதம் பொறுக்கி எடுத்து அவர்களைக் கொண்டே யுத்த எதிர்ப்பு சத்தியாக்கிரகத்தை நடத்தினால் நன்றாயிருக்குமென்று எழுதியிருந்தார். அதற்கு பதிலாகத்தான் மகாத்மாஜி கடைசி வரியில் ''நானாக எதுவும் செய்வதற்கில்லை; பகவான் விருப்பம்போல் நடக்கும்'' என்று பதில் சொல்லியிருக்கிறார்.

### மொழி பெயர்ப்பு

சேவாக்கிராம்
(மார்க்கம்) வர்தா
10-9-41

அன்புள்ள கிருஷ்ணமூர்த்தி,

தலைவர்கள் கூடித் தீர்க்காலோசனை செய்து, தங்கள் முடிவான அபிப்பிராயத்தை வெளியிட வேண்டும் என்னும் உமது யோசனை எனக்குப் பிடித்திருக்கிறது. பாமர ஜனங்களின் அபிப்பிராயம் என்று சில விஷயங்களைச் சொல்லியிருக்கிறீர். பாமர ஜனங்கள் வாயில்லாத ஊமைகள் அல்லவா? என்னைப் பொறுத்த வரையில், இயந்திரத்தைப்போல் நான் எதுவும் செய்ய முடியாது. கடவுளின் விருப்பம் நிறைவேறும்.

(ஒப்பம்) எம். கே. காந்தி

### ரேடியோவில் தியாகராஜர்

திருவையாற்றில் நடக்கும் ஸ்ரீ தியாகப் பிரம்ம மகோற்சவத்தைக் கேட்டே அநுபவித்து விடலாம். உண்மையில், கேட்டு அநுபவிப்பதுதான் இந்த உற்சவத்தில் முக்கியமானது. இப்படிக் கேட்டு அநுபவிப்பதற்கு வேண்டிய வசதியைத் திருச்சி ரேடியோ நிலையத்தார் சென்ற இரண்டு வருஷங்களிலும் செய்து கொடுத்தது போல் இவ்வருஷமும் செய்து கொடுத்தார்கள். ஆராதனையன்று காலை அவர்கள் கொடுத்த விவரங்கள் வெகு ரஸமாயிருந்தன. பொதுவாக, ஆராதன மகோற்சவமானது விமரிசையாக நடைபெற்றது என்று எல்லாருக்கும் நம்பிக்கை ஊட்டும்படியாக, ''இதோ மிருதங்கத்துக்குப் படிபடியாக ரவை வருகிறது!'' என்ற விவரம் உள்படச் சொன்னார்கள்.

- என்ன சேதி?

### உலகின் அதிர்ஷ்டம்

பத்து நாளைக்கு முன்பு வரையில் ஸர் ஆர்ச்சிபால்ட் வேவல் இந்தியாவின் பிரதம சேநாதிபதியாயிருந்தார். இந்தியாவை ஜப்பானிய - ஜெர்மானிய அபாயங்களிலிருந்து பாதுகாக்கும் பொறுப்பு அவரிடம்



இருந்தது. இத்தகைய பெரிய பொறுப்புள்ள பதவி வகிப்பவருடைய படத்தை நமது பத்திரிகையின் மேலட்டையில் போட வேண்டுமென்று தீர்மானித்தோம். ஆனால், அவருடைய படத்தை நமது மேலட்டையில் அச்சடிக்க ஆரம்பித்த அன்றே அவர் இந்தியாவை விட்டுப் போகும்படியான அதிர்ஷ்டம் ஏற்பட்டு விட்டது. அதிர்ஷ்டம் உலகத்துக்கே என்றே சொல்லவேண்டும். இந்திய சேநாதிபதி பதவியைக் காட்டிலும் இன்னும் பெரிய பிரம்மாண்டமான பதவிக்கே அவர் போகிறார். பஸிபிக் சமுத்திரத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு அவருக்கு இப்போது ஏற்பட்டிருக்கிறது. அமெரிக்கப் படைகள், ஆஸ்திரேலியப் படைகள், டச்சு இந்தீஸ் படைகள், மலாய் நாட்டுப் படைகள் எல்லாம் அவருடைய ஏக தலைமையின் கீழ் மூர்க்க ஜப்பானை எதிர்த்துப் போராடப் போகின்றன. எனவே, இன்று உலகத்தின் பூரண திருஷ்டியும் ஸர் ஆர்ச்சிபால்டு வேவல் மீது இருக்கிறது என்று கூறுவது மிகையாகாது.

– அட்டைப் படவிளக்கம்

## கிருஷ்ண பிடாரன்

நன்றாய் வேண்டும், என்.எஸ். கிருஷ்ணனுக்கு! நம்மையெல்லாம் எத்தனை தடவை சிரித்துச் சிரித்து வயிற்றுவலி கண்டு தவிக்கப்பண்ணியிருக்கிறார்! அப்பேர்ப்பட்டவர் இந்தக் கிருஷ்ண பிடாரன் படத்தில் 'பாகவதர்' வேஷம் போட்டுக் கொண்டு திண்டாடித் தவிப்பது விதிப் பயனேயல்லவா? மேலே படத்தில் மிருதங்கம் வாசிக்கத் தெரியாமல் என்.எஸ். கிருஷ்ணன் தவிப்பதையும், அவர் கையில் அகப்பட்டுக் கொண்டு மிருதங்கம் தவிப்பதையும் பார்க்கலாம். பாகவதரும், மிருதங்கமும் தவிப்பதைப் பார்த்துவிட்டு டி.ஏ. மதுரமும் தவிக்கிறார்! இவ்வளவு தவிப்பையும் ''கிருஷ்ண பிடாரன்'' படத்தில் எப்போது பார்க்கப் போறோமென்று நமக்கும் தவிப்பாய்த்தான் இருக்கிறது.



– சினிமா செய்தி

## டி.டி.கே. மனம் வைத்தால்.....



''சங்கீத ஞான'' சிநேகிதர்களுடைய உதவியில்லாமல் டி.டி.கே. தாமாகவே சங்கீதம் கேட்கத் தொடங்கும்போது, 'ட்' 'த்' 'ப்' என்னும் எழுத்துக்கள் சம்பந்தமான கஷ்டமும் அவருக்கு நீங்கிப் போய்விடும். ''பட்டி விடுவராது'' ''புட்டின நாடே'' என்னும் வரிகளில் உள்ள 'ட்' எழுத்தைக் காலந் தவறாமல் நாக்கைப் புரட்டி உச்சரிக்க முடியுமென்றால், ''கூட்டி'' ''ஊட்டி'' ''காட்டி'' என்னும் வார்த்தைகளில் உள்ள ''ட்'' எழுத்தையும் உச்சரிக்க முடியுமென்பதை அவர் அறிந்து கொள்வார். ''கோர்கே லொஸகே பிருதுகதா'' என்பதை உச்சரிக்கக் கூடிய நாக்கு,

''இன்னல் கூட்டி இன்பம் ஊட்டி
இந்திர ஜால வித்தை காட்டி''

என்பதை உச்சரிக்க முடியவில்லையென்றால், அந்த நாக்கிலே ஏதோ பிசகே தவிரத் தமிழ் பாஷையில் இல்லை என்பதைக் காண்பார். இன்னும் நல்ல சங்கீதத்தை மேலும் மேலும் அவர் சுயமாகவே கேட்டுப் பழகி வருவாரானால், சங்கீதத்துடனே ஸாஹித்யத்தின் கருத்தையும் உணர்ந்து அநுபவிக்கவும், அர்த்த புஷ்டியுள்ள ஸாஹித்யத்தின் நிரவலில் ''பகவானுடைய லீலா விபூதிகளை ஞானக் கண்ணால் பார்த்து அநுபவிக்கவும்'' கூட வல்லவராகி விடுவார். ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் மனது வைத்து மட்டும் முயன்றாரானால், அவரால் ஆகாத காரியம் ஒன்று இருக்கக்கூடுமென்றே என்னால் நம்ப முடியாது.

– கர்நாடகம்




◆ கண்களில் நீர் மல்குமளவுக்கு மனத்தை நெகிழ வைக்க வேண்டும் என ஏதாவது சபதம் எடுத்திருந்தீர்களா என்ன? இந்த வாரம் மூன்று கதைகளுமே உங்கள் சபதத்தை நிறைவேற்றின!
திருச்சி - 16, ஞானகிமைந்தன் எஸ். ராஜகோபால்.

◆ நடுபக்கக் காலண்டரில் ஒன்றை வைத்துக் கொண்டு, மற்ற மூன்றை நண்பர்களுக்குக் கொடுக்கச் சொன்னீர்கள். ஆனால் ஒன்றைக் கூட வேறு யாருக்கும் கொடுக்க எனக்கு மனம் வர வில்லை! நான்கையும் பத்திரப்படுத்திக் கொண் டேன்!
முத்துப்பேட்டை, ரிஷி.

◆ இவ்வளவு பெரிய கலவரம் கர்நாடகாவில் நடந்தும், மத்திய அரசு பங்காரப்பாவை நீக்க 'யோசனை' செய்வதாகக் கூடத் தெரியவில்லை! காரணம்: ஒன்று, அங்கு காங்கிரஸ் ஆட்சி; மற் றொன்று, மத்திய அரசுக்கு மெஜாரிட்டி இல்லை. ஆனால், உங்கள் தலையங்க வரிகளைப் போல் இதற்கு உடனடி தீர்வாகப் பங்காரப்பாவுக்குக் கல்தா கொடுக்க மத்திய அரசு யோசித்தால், பின் னால் வருத்தப்பட நேரிடும் என்பது நூற்றுக்கு நூறு உண்மை!
சிதம்பரம், ரா. கருணாகரன்.

◆ வாரத்துக்கு வாரம் தன் கட்டுரைப்பகுதியின் இறுதியில் ஒரு சஸ்பென்ஸை வைத்து தான் டைரக்டர் மட்டுமல்ல; கதாசிரியருங்கூட என்று நிரூபிக்கிறார் டைரக்டர் ஸ்ரீதர்.
சென்னை - 14, ஐயாறு எஸ். வாசுதேவன்.

◆ மதுமனோவின் 'ஆசைக் கனவுகள்' குறிப் பிடத்தக்க சிறப்பான சிறுகதை. அக்கதை படித் ததும் எழுந்த சிந்தனை :
கனவு - மோசமான போதை வஸ்து. விழித் துக் கொள்ளாவிட்டால் ஆளையே விழுங்கி விடும். கனவை ஒரு சொடுக்கில் நிறுத்தவும் - நடத்தவும் பழக்கப்பட்டவனுக்கு வாழ்க்கை சலிப்படைவதில்லை. கனவு மாபெரும் ஆகிருதி யைக் கொண்ட யானையைப் போன்றது. இலட் சியம் என்கிற அங்குசமே அதை வழிநடத்த முடியும்.
திருச்சி - 4, தாயு. செந்தில் குமார்.

◆ இவ்வாரக் கல்கியை ''பி.ஜே.பி. சிறப் பிதழ்'' என்றே போட்டிருக்கலாம். இக்கட்சி பற்றிய நிறை குறைகள் எல்லாம் வெட்ட வெளிச்சமாக்கி விட்டீர்கள். இக்கட்சியே கூட இத்தகைய ஒரு தொகுப்பை வெளியிட்டு இருக்க முடியாது. எதிர்க் கட்சிகளும் இவ்வாறு சிந்தித்து இருக்க முடியாது. நல்ல கருத்துக்கருவூலம். தொகுப்பாளருக்கு எனது மனப்பூர்வ வாழ்த்து!
ஊத்தங்கரை, கவி செங்குட்டுவன்.

◆ பி.ஜே.பி பற்றிய உங்களது கட்டுரைகளைப் படித்தேன். ராமர் கோவிலைக் கட்டுவோம் என்று சொல்லித்தான் பா.ஜ. கட்சி சென்ற தேர்த லில் ஓட்டு வாங்கியது என்று எழுதியிருக் கிறீர்கள். இது ஓரளவுதான் உண்மை. அயோத்தி பிரச்னையில் பா.ஜ.கட்சியின் நிலையை ஆதரிக் காதவர்கள் கூட, மற்ற விஷயங்களில், இந்தக் கட்சி கூறிவரும் கருத்துக்களை ஏற்றுக் கொள் கிறார்கள்.
சென்னை - 17, கே.என். ஸ்ரீதரன்.

◆ நம் நாட்டில் தேசிய ஒருமைப்பாடு சிதறா மல் இருக்க ஏகதா யாத்திரை தற்சமயம் அவசிய மான ஒன்று. ஆனால் காந்தியக் கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்கிற பி.ஜே.பி.மதத் துவேஷத்தை உண்டாக்காமல் நேரான வழியில் ஆட்சியைப் பிடிக்கலாமே?
மதுரை - 7, எஸ். திருமலை.

◆ 'ஒன்றுக்குள் ஒன்று' என்று கட்டத்திற்குள் 'பிராமண சங்கம்' (தமிழ்நாட்டில்) ஆர்.எஸ். எஸ்ஸின் துணை அமைப்பு என்று குறிப்பிட் டிருப்பது உண்மையே அல்ல. ஆர்.எஸ்.எஸ்ஸில் சாதி என்ற நோய் என்றுமே கிடையாது. சாதி உணர்வின்றிச் செயல்படும் ஒரு தேசிய இயக்கம் ஆர்.எஸ்.எஸ்.
கும்பகோணம், சத்ரபதி.

◆ எந்த ஒரு அரசியல் கட்சிக்கும் தாங்கள் பிரகரித்தது போல நாங்கள் கிளைஸ்தாபனமாக இருக்கமாட்டோம். தாங்கள் எங்கள் சங்கம் ஒரு அரசியல் கட்சியின் கிளை என்று குறிப்பிட்டிருப் பது கண்டிக்கத்தக்கது.
திருச்சி, வி. ரெங்கராஜன்.
(தமிழ்நாடு பிராமணர் சங்கம்)

◆ பாரதீய ஜனதா கட்சியைப் பற்றி இவ்வளவு விவரமாக எழுதியமைக்கு என் மனமார்ந்த நன்றி. இருப்பினும் குவாலியர் மஹாராணி, ராஜ மாதா விஜயராஜ சிந்தியா அவர்களைப் பற்றி ஒரு வரி கூட தாங்கள் குறிப்பிடாதது கண்டு வருந்து கிறேன்.
குளூர், அ. ஜவஹர்.

◆ பெங்களூரில் தமிழருக்கு இழைக்கப்பட்ட கொடுமைகள் கொஞ்ச நஞ்சமல்ல. 200 கோடி ரூபாய்க்கு மேல் சேதம். அகதிகளாகச் சென்ற வர்கள் தவிர, இன்னமும் பெங்களூரில் கிடைத்த இடத்தில் ஒண்டிக் கொண்டு அஞ்சி வாழ்வோர் ஏராளம். இவர்களுக்கு நிவாரணம் அளிக்க நிதி உதவி கோருகிறோம். பழைய ஆடைகள், பாத்தி ரங்கள், அரிசி, கோதுமை போன்ற பண்டங்கள் எது அளித்தாலும் நன்றியுடன் ஏற்கிறோம். ஏழைத் தமிழருக்கு முறையாக விநியோகிக்கப் படும். உடனுக்குடன் பற்றுச்சீட்டும் வழங்கப் படும்.

59, அண்ணாசாமி முதலியார் சாலை, பெங்களூர் - 42,
க. சுப்பிரமணியன், தலைவர், பெங்களூர் தமிழ்ச் சங்கம்.

உ

ஸ்ரீரஸ்து. சுபமஸ்து. ஸ்ரீ வெங்கடேசப்ரசன்ன :

ஜெகத்குரு ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் ஆசியுடன்

30.1.92 முதல் 10.2.92 வரை பம்பாய் வழியாக அஹமதாபாத், துவாரகை முதலிய ஸௌராஷ்ட்ர தேச யாத்திரை.

24.2.92 முதல் 11.3.92 வரை மஹாசிவராத்ரி காசி, கயா, ப்ரயாகை த்ரீஸ் தலி யாத்திரை. இத்துடன் நேபாள யாத்திரை.

7.3.92 முதல் 20.3.92 வரை காசியில் ஒரு நாள் - நேபாள யாத்திரை.

23.3.92 முதல் 3.4.92 வரை நாசிக், பண்டரீபுரம், கோல்ஹாபூர் முதலிய மஹாராஷ்ட்ர தேச யாத்திரை.

மே மாதம் முதல் வாரத்தில் ஆரம்பித்து 35 நாட்கள் கொண்ட பம்பாய், ஆக்ரா, மதுரா, டில்லி, ஹரித்வாரம், ரிஷிகேசம், பத்ரிகாஸ்சிரமம், திருக்கேதாரம், காசி, கயா, ப்ரயாகை, கல்கத்தா, பூரி உள்ளிட்ட யாத்திரை.

இத்துடன் 15 நாட்கள் கொண்ட பத்ரீ, கேதார்நாத் யாத்திரை.

மேலும் 19 நாட்கள் கொண்ட காசி நேபாள யாத்திரை.

இவை புறப்பட இருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

எங்கள் சார்ஜுகளில் ரயில் மற்றும் பஸ் சார்ஜுகள், ஊர் சுற்றிப் பார்க்கும் செலவுகள், தங்கும் இடவாடகை, கைடிங், ஒரு பை, 3 காப்பி, காலை டிபன், இரண்டு வேளை போஜனம் அல்லது இரவு நேரங்களிலும் பலகாரம் இவை அடங்கும். யாத்ரீகர்களின் பேராதரவை எதிர்பார்க்கிறோம்.

மேலும் விவரங்களுக்கு :

**ஸ்ரீ மஹாலக்ஷ்மி யாத்ரா சர்வீஸ்**

1, பூசுப் லப்பை லேன், அருணாசல ஆசாரி தெரு,
சேப்பாக்கம், சென்னை - 600 005 போன் : 841957

● எங்களுக்கு எங்கேயும் கிளை அலுவலகம் கிடையாது.

அனைவருக்கும் எமது பொங்கல் நல்வாழ்த்துக்கள்!

## இந்தியாவில் விற்பனையில் முதலிடம் வகிப்பது

# கோபால் பல்பொடி




பாக்கெட் விலை ரூ. 1/-

பாக்கெட் விலை ரூ. 1/-

வாங்கி உபயோகியுங்கள்!

- மினர்வா

# 15 வது சென்னை புத்தக கண்காட்சி




அமைப்பாளர்கள்

**தென் இந்திய புத்தக விற்பனையாளர்கள் மற்றும் பதிப்பாளர்கள் சங்கம்**

**4.1.92 முதல் 16.1.92 வரை**

இடம் :
காயிதே மில்லத் அரசு மகளிர் கல்லூரி
அண்ணா சாலை, சென்னை – 600 002.
(பின்னி ரோடு நுழைவாயில்)

நேரம் :
வார நாட்களில் மாலை 2.00 மணி முதல் 8.00 மணி வரை
சனி, ஞாயிறு மற்றும் விடுமுறை நாட்களில்
காலை 11.00 மணி முதல்
இரவு 8.00 மணி வரை

**எல்லா புத்தகங்களுக்கும் 10% தள்ளுபடி.**

நுழைவுக் கட்டணம் : ரூ.2/-

RPS/MBF-32

# விஜயகுமாரியின் வாய்ப்பு


விஜயகுமாரி

"**எ**ன்னடா, நாம் பார்த்த 'நெஞ்சில் ஓர் ஆலயம்' முக்கோணக் காதல் கதை ஆயிற்றே?'' என்று நீங்கள் யோசித்திருந்தால், 'எனக்கு ஏன் இந்தத் தடுமாற்றம்?' என்று நீங்கள் பயந்திருந்தால் அது நியாயம்தான்! நான் சென்ற வாரம் கூறிய கதையை நீங்கள் திரையில் பார்த்திருக்க முடியாதுதான். ஏனென்றால், அந்தக் கதை முழு திருப்தி அளிக்கவில்லை என்ற காரணத்தால் அதை அப்படியே விட்டு விட்டு, ஆஸ்பத்திரியை மையமாக வைத்தே வேறு ஒரு கதையை, அதை விடச் சிறந்த கதையை, உருவாக்கி விட்டேன்! அதுதான் நீங்கள் திரையில் பார்த்து மகிழ்ந்த 'நெஞ்சில் ஓர் ஆலயம்!'


விசுவநாதன் - ராமமூர்த்தி

'ஒரு படத்தை, எடுக்குமுன் எவ்வளவு யோசிக்க வேண்டும்' என்பதை உணர்த்தவே இதை விவரமாகச் சொன்னேன். 'நான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்' என்று செயல்படுவது விவேகம் அல்ல.

புதிய கதையை நண்பர்களிடம் கூறினேன். அவர்களுக்கு ரொம்பப் பிடித்துப் போயிற்று. பச்சைக் கொடி காட்ட, 'இசை அமைப்பாளராய் யாரைப் போடுவது?' என்ற அடுத்த கேள்வி எழுந்தது.

**பு**திதாக யாரையாவது பயன்படுத்திக் கொள்ள நினைத்தேன். அப்போது மிகப் பிரபலமாக இருந்த மெல்லிசை இரட்டையர் விஸ்வநாதன் - ராமமூர்த்திதான். அவர்கள் திறமையை நான் அறிந்திருந்தாலும் நேரில் சந்தித்ததில்லை. அலுவலக மானேஜர் மூலமே ஒப்பந்தம் செய்து விட்டேன்.

சில நாட்களுக்குப் பின் ஒரு சபா நிகழ்ச்சிக்குச் சென்றிருந்த போது, எனக்குப் பின் வரிசையில் யாரோ இரண்டு பேர் ஒரு நபரை அடையாளம் காட்டிப் பேசிக் கொண்டிருந்தார்கள். எனக்கு ஆச்சர்யம். இடைவேளையில் அவர்கள் சுட்டிக் காட்டிப் பேசிக் கொண்டிருந்த நபரிடம் போய் என்னை நானே அறிமுகம் செய்து கொண்டேன். அந்த நபரும் மகிழ்ச்சியும் வியப்பும் அடைந்தார். வித்தியாசமான சூழ்நிலையில் நான் சந்தித்த அந்த நபர் : மெல்லிசை மன்னர் எம்.எஸ்.வி...!

'நெஞ்சில் ஓர் ஆலயம்' - புதிய கதை

## டைரக்டர் ஸ்ரீதர்

உருவான உடனே அதில் சிவாஜியை நடிக்க வைப்பது என்ற எண்ணத்தையும் மாற்றிக் கொண்டேன். புதிதாக யாரையேனும் அறிமுகப்படுத்துவது என்று தீர்மானித்தேன். புது முகம் தேடும் படலம் ஆரம்பமாயிற்று.

என் இனிய நண்பர், நடிகர் வி. கோபாலகிருஷ்ணன் அப்போது எஸ்.வி. சகஸ்ரநாமம் நாடகக் குழுவில் நடித்து வந்தார். போலீஸ்காரன் மகள் நாடகம் காண என்னை அழைத்திருந்தார். அந்த நாடகத்தில் ஓர் இளைஞரின் நடிப்பு என்னை வெகுவாகக் கவர்ந்தது. ''இவ்வளவு திறமையா!'' என்று வியந்து போனேன். இவருக்கு எப்படியும் ஒரு வாய்ப்புக் கொடுத்து சினிமாவில் அறிமுகப்படுத்தி விட வேண்டும் என்று அந்தக் கணமே தீர்மானித்தேன். 'நெஞ்சில் ஓர் ஆலய'த்தில் தரப்பட்ட அந்த வாய்ப்பை

# தேவிகாவுக்குக் கிடைத்த கதை!


தேவிகா

அந்த இளைஞரும் மிகச் சிறப்பாகப் பயன் படுத்திக் கொண்டு, வெகு சீக்கிரத்தில் திரையுலகில் மிக முக்கியமான ஓர் இடத்தைத் தமக்கென்று பிடித்துக் கொண்டார். அவர் யார்? இந்நேரம் ஊகித்திருப்பீர்களே! ஆம், முத்துராமனேதான்!

என் மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய எல்.வி. பிரசாத் அற்புதமான டைரக்டர். சில சமயம் என் பட ஷூட்டிங்கும் அவர் படத்தின் ஷூட்டிங்கும் ஒரே ஸ்டுடியோவில் அருகருகே வேறு வேறு ஃப்ளோர்களில் நடக்கும். அது போன்ற சந்தர்ப்பங்களில் அவர் செட்டுக்குப் போய்ச் சற்று நேரம் இருந்து உரையாடுவதை வழக்கமாக அல்ல, கடமையாகவே கொண்டிருந்தேன். இம்மாதிரி தருணம் ஒன்றில்தான் பிரசாத் டைரக்ஷனில் இயங்கிக் கொண்டிருந்த அந்த இளைஞரைப் பார்த்தேன். எனக்கு ரொம்பப் பிடித்துப் போயிற்று. அந்தக் கணமே '''நெஞ்சில் ஓர் ஆலயம்' படத்தில் முக்கியமான டாக்டர் வேஷம் இவருக்குத்தான்'' என்று தீர்மானித்துக் கொண்டேன். பேசிப் பார்த்த போது அவரும் மகிழ்ச்சியுடன் சம்மதித்தார். அவர்தான் கல்யாண் குமார்.

அடுத்து ஹீரோயின் தேடும் படலம். எனக்கு விஜயகுமாரியைப் போட வேண்டும் என்று ஆசை. ''ரொம்பப் பவர்ஃபுல் கேரக்டர். விஜயகுமாரிதான் பொருத்தமாக இருப்பார்'' என்ற என் கருத்தைப் பார்ட்னர்களும் ஏற்றுக் கொண்டனர்.

விஜயகுமாரி வீட்டுக்குப் போய் அவரிடம் பேசினேன். ''எதற்கும் அவரிடம் ஒரு வார்த்தை கேட்டு விட்டுச் சொல்கிறேன்'' என்றார். கணவர் எஸ்.எஸ். ராஜேந்திரனிடம் சொல்லி விட்டுச் செய்ய வேண்டும் என்ற அவர் கருத்தை நான் மதித்தேன். ''சரி கேட்டுச் சொல்லுங்கள்'' என்றேன்.

உடனே விஜயகுமாரியும் எஸ்.எஸ். ஆரைக் கலந்தாலோசித்துவிட்டுச் சம்மதம் தெரிவித்தார். நானும் மகிழ்ச்சியுடன் ஆபீசுக்குத் திரும்பி விட்டேன்.


முத்துராமன்


எஸ்.எஸ்.ஆர்.

சுமார் இரண்டு மணி நேரம் கழித்து எனக்கு ஒரு ஃபோன் வந்தது. ''விஜயகுமாரி நடிக்க ஒப்புக் கொண்ட படத்தின் கதையை எஸ்.எஸ்.ஆர் கேட்க விரும்புகிறார்'' என்பது ஃபோன் செய்தி! இதைக் கேட்டதும் எனக்குக் கோபமே வந்து விட்டது! இலேசான அவமானமாக உணர்ந்தேன் என்று கூடச் சொல்லலாம்.

ஒரு நல்ல டைரக்டர் எனில் சாதாரணமாக நடிகர்கள் கதையைக் கேட்காமல் கூட நடிக்க ஒப்புக் கொண்டு விடுவார்கள். ஆனாலும் கூட, ''கதை என்ன? என் கேரக்டரின் தன்மை என்ன?'' என்றெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டு ஒப்புக் கொள்வதிலும் தவறில்லைதான். அவர்கள் கேட்டால், விளக்கிச் சொல்ல வேண்டியது ஒரு டைரக்டரின் கடமையும் கூட.

ஆனால், நடிகை நடிக்க ஒப்புக் கொண்ட பின்னர், அவருடைய கணவர் ''கதை என்ன?'' என்று கேட்பது எனக்குச் சரியென்று படவில்லை. அந்தக் கணமே முடிவெடுத்து, ''விஜயகுமாரி என் படத்தில் நடிக்கவில்லை'' என்பதை விஜயகுமாரியிடமே தெரிவிக்கச் சொல்லி விட்டேன்.

விஜயகுமாரிக்குப் பதில் யார்? சட்டென்று நினைவுக்கு வந்தவர் தேவிகா. அப்போது அவர் இரண்டாம் கதாநாயகி என்ற அளவில் நடித்துக் கொண்டிருந்தார். ஆனால் அவர் திறமையை அறிந்து, ஹீரோயினாக என் படத்தில் 'பிரமோஷன்' கொடுக்கத் தீர்மானித்தேன். ஒப்பந்தம் முடிந்தது.

கதை-வசனம் தயார்; நடிக-நடிகையர், டைரக்டர் எல்லாரும் ரெடி - லொகேஷன் தவிர! ஒரே லொகேஷன். ஆஸ்பத்திரி அல்லது குறைந்த பட்சம் ஒரு நர்சிங் ஹோம். அதற்கு எங்கே போவது? கல்யாணத்தைப் பண்ணிப் பார்க்கும் முன்னர், வீட்டைக் கட்டிப் பார்க்க வேண்டிய கட்டாயத்தில் இருந்தேன் நான்! எப்படி சமாளித்தோம்? அடுத்த வாரக் கல்கி படித்துத் தெரிந்து கொள்ளுங்களேன்!

தமிழ் எழுத்தாளர்கள் மேம்பாட்டுக்குப் புத்தாண்டு வாழ்த்துகள்.



போன் : 73388

# கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் (Regd)

## அளிக்கும்







# தமிழ் எழுத்தாளர் நலநிதி அறக்கட்டளைக்காக

# இன்னிசை விருந்து

**விருந்து அளிப்பவர்கள்:**

'இசைஞானி' இளையராஜா,
கங்கை அமரன்,
எஸ்.பி. பாலசுப்ரமணியம்,
மனோ, சித்ரா மற்றும் பல
இசைக்கலைஞர்கள்

**விருந்து நடக்கும் இடம், நாள்:**

காமராஜ் மெமோரியல் ஹால்,
தேனாம்பேட்டை.
26-1-92 ஞாயிறு அன்று.
காலை 10-30 முதல் 1-30 வரை.

பிரபல திரைப்பட நட்சத்திரங்களுடன்
நேர்முக கலந்துரையாடல்
விருந்தையும் கங்கை அமரன் அளிப்பார்.
ரசித்து மகிழலாம்.

டிக்கெட்:
ரூ. 1,000/- ரூ. 500/- ரூ. 250/-

*entitled to I.T. deduction u/s. 80 G.

சிற்றுண்டி வசதி உண்டு.

A.V.S. ராஜா
தலைவர்
கார்த்திக்ஃபைன் ஆர்ட்ஸ்

S. சத்தியமூர்த்தி I.A. & A.S.
விழா அமைப்பாளர்.

டாக்டர் விக்கிரமன்
நிர்வாக அறங்காவலர்
தமிழ் எழுத்தாளர்
அறக்கட்டளை

மொத்தமாக இருக்கைகளைப் பதிவு செய்பவர்களுக்குக் கட்டணத்தில் சலுகை உண்டு.
அணுகவும் அமுதசுரபி, விக்கிரமன் போன்: அலுவலகம் — 528545 இல்லம் — 423060

**''நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்''**

— ''மகாகவி பாரதி''



ஈகிள் டைரி
பரிசுத் திட்டம்

# சிம்பு–இலக்கியா தேர்ந்தெடுத்த அதிர்ஷ்ட சாலிகள்

சிம்புவின் முழுத் திறமைகளையும் வெளிப்படுத்தும் விதமாய் டி. ராஜேந்தர் தயாரிக்கும் படம் பொங்கலுக்கு ரிலீஸ். படத்தின் டப்பிங் நடந்து கொண்டிருக்கிறது. விஜயா கார்டனிலிருந்து வந்த சிம்புவின் முன்னால் டைரி பரிசுத் திட்டக் கூப்பன்கள் அடங்கிய தபால் உறைகளைக் கொட்டினோம்.

சபரிமலைக்குப் போகிறார்கள் சிம்புவும், தங்கை இலக்கியாவும். சிம்பு கறுப்புத் துண்டு கட்டிக் கொண்டு, கறுப்புச் சட்டை அணிந்து கொண்டு இருந்தான். இலக்கியா காவி நிறப் பாவாடை சட்டை. இருவரும் கூப்பன் குவியலுக்கு முன் உட்கார்ந்து கொண்டு, மேலும் கீழுமாய்க் கலைத்து விட்டனர். ''இதிலிருந்து ஐந்நூறு கவர் எடுத்துத் தரணுமா? அம்மாடி!'' என்றான் சிம்பு மலைப்பாய். பின்னர் இரண்டு பேரும் கிடுகிடுவெனக் கவர்களை எடுத்துக் கொடுத்தார்கள். அவர்கள் தேர்ந்தெடுத்துக் கொடுத்தவைகளை எண்ணி ஒரு பையினுள் போட்டுக் கொண்டே வந்தோம். 498 வந்ததும், ''இன்னும் ஆளுக்கு ஒன்று எடுத்துக் கொடுத்தால் போதும்'' என்றதும், இரண்டு பேரும் குவியலினுள்ளே கைகளை விட்டு, ஆளுக்கு ஒன்று எடுத்துத் தந்தார்கள்.

''எனக்கும் ஒரு டைரி கொடுப்பீங்களா?'' என்று கேட்டான் சிம்பு. ''அனுப்பி வைக்கிறோம்'' என்று கூறி விட்டு, சிம்பு, இலலக்கியாவுக்குப் புத்தாண்டு வாழ்த்துக் கூறி விடைபெற்றோம்.

- நிருபர்
படம் : யோகா

டைரிகள் கூரியர் சர்வீஸ் மூலமும் கல்கி ஏஜெண்டுகள் மூலமும் பதிவுத் தபால் மூலமும் சம்பந்தப்பட்ட வாசகர்களுக்கு அனுப்பப்பட்டுள்ளன.

- ஆசிரியர்

## குலுக்கலில் ஈகிள் டைரி பெறுவோரின் பெயர்ப் பட்டியல்

1) எஃப். எச். ராஜேந்திரகுமார், கோயமுத்தூர் - 641 012, 2) எஸ். கணேசன், தேவகோட்டை - 623 302, 3) வி. எஸ். இராசகோபால், சேலம் - 3, 4) மா. சிவராக, அய்யம்பாளையம் - 638 455, 5) ஜே. தேவராஜன், கடலூர் - 2, 6) எஸ். பழனிச்சாமி, கொச்சின் - 682 018, 7) கே. ராஜேஸ்வரி, கல்லிடைக் குறிச்சி - 627 416, 8) எஸ். ஜெகதீசன், உத்திரமேரூர் - 603 404, 9) ஆர். நாககப்ரமணியன், கிருஷ்ணகிரி - 635 001, 10) கே. சுந்தரராஜன் , மணலூர் - 604 502, 11) எம். எம். அப்துல் காதர், ஏறுவாடி - 627 103, 12) எஸ். நாராயணராவ், செங்கற்பட்டு - 603 002, 13) பி. மாடசாமி, கோயமுத்தூர் - 641 015, 14) அ. சீனிவாசன், வேலூர் - 632 006, 15) கே. கோபாலகிருஷ்ணன், வீணனாத்தூர் - 631 303, 16) கே. எஸ். பவானி, கோயமுத்தூர் - 641 009, 17) எம், சாம்பசிவம், திருப்பூர் - 638 607, 18) கே. முரளி, கடலூர் - 607 001, 19) பி. ரவிச்சந்திரன், சிங்காநல்லூர் - 641 005, 20) சி. ஆர். ஸ்ரீநாத், கோவை - 641 007, 21) ஆர். நடராஜன், கோயமுத்தூர் - 641 016, 22) கே. சுந்தரராசன், மதுரை - 625 001, 23) ஆர். பன்னீர்செல்வம், விளந்தை ஆண்டிமடம் - 621 801, 24) மு. ஜெயராஜ், திண்டுக்கல் - 624 002, 25) எம். ஏ. சுப்ரமணியன், தர்மபுரி - 636 701, 26) பி. ருத்ரகாளீஸ்வரன், திருச்சி - 620 004, 27) இர. பழனிசாமி, கோவை - 638 214, 28) என். குமார், திருச்சி - 620 004, 29) என். இளஞ்சியம், திருச்சி - 620 020, 30) புலவர். பழனி அரங்கசாமி, ஆலங்குடி - 622 301, 31) எஸ். தவமணி, தர்மபுரி - 636 701, 32) ஆர். ராஜம், துறையூர் - 621 010, 33) எம். ஜோதிகாந்தன், நாகை - 611 108, 34) எஸ். சரஸ்வதி, மதுரை - 625 011, 35) எம். எஸ். விஸ்வநாதன், செங்கற்பட்டு - 603 002, 36) நாகரத்னம், சேலம் டவுன் - 636 001, 37) வி. சந்தானராமன், கடலூர் - 607 001, 38) கி. வீரமணி, கடலூர் - 607 002, 39) சி. எஸ். இராமலிங்கம், கடலூர் - 2, 40) கே. எஸ். இலக்குமி நரசிம்மன், திருச்சி - 620

006, 41) கே. தர்மராஜ், திருச்சி - 620 011, 42) பி. பாலசுப்ரமணியம், கோயமுத்தூர் - 641 018, 43) பி. முரளிதர், நெய்வேலி - 607 802, 44) பி. ஆர். ரங்கசாமி, கோவை - 641 302, 45) கே. சி. வெங்கட்ராமன், ஸ்ரீரங்கம் - 620 006, 46) என். விஜயலக்ஷ்மி, திருச்சி - 620 006, 47) குரு கிருஷ்ணா, திருச்சி - 620 008, 48) சி. எஸ். நாகராஜன், கோயமுத்தூர் - 641 001, 49) வி. சேகர், பாம்பே - 400 093, 50) கே. தங்கம், பாம்பே - 400 005, 51) கே. ராஜசேகர், திருவண்ணாமலை - 606 754, 52) பரணிதரன், புதுவை - 607 402, 53) ஜானகி இராமமூர்த்தி, கடலூர் - 607 001, 54) இரா. மதிவாணன், பாண்டிச்சேரி - 607 402, 55) ஜெ. ஜீவரத்னம், கோவை - 18, 56) எம். கார்த்திகா, காரைக்குடி - 623 004, 57) பி. கனகராஜ், காடுவெட்டி (அ. நி.) - 600 077, 58) கே. சி. சுப்ரமணியன், படியூர் - 638 604, 59) எம். மகேஸ்வரி, ஆடுதுறை - 612 101, 60) எம். சாந்தி, மதுரை - 625 014, 61) எஸ். ஜெகன், தென்காசி., 62) கே. கமலா, காரைக்கால், 63) க. பாலமுருகன், சமயபுரம் - 621 112, 64) எல். முத்துசாமி, ஈரோடு - 2, 65) ஏ. கணேசன், சென்னிமலை - 638 051, 66) என். எஸ். அபர்ணா, பரமக்குடி - 623 707, 67) ஏ. சிவலிங்கம், கடலூர் - 607 001, 68) ஈ. எஸ். ராம்குமார், ஈரோடு - 638 006, 69) என். ராமகிருஷ்ணன், கோயம்புத்தூர் - 641 042, 70) எம். கிருஷ்ணராஜ், உடுமலைப்பேட்டை - 642 126, 71) ஜி. கனகம்மாள், மயிலாடுதுறை - 609 001, 72) எம். எஸ். சுப்ரமணியம், காளிப்பட்டி - 637 501, 73) கே. ராமநாதன், எண்ணக்குடி, மாந்தை அ. நி., 74) இராம. ஸ்கந்தகோபாலன், விழுப்புரம் - 607 203, 75) ஆர். பாலசுப்ரமணியம், சேலம் - 637 201, 76) எஸ். பத்மநாபன், கோயமுத்தூர், 77) பொ. நடராசன், சேலம் - 636 101, 78) சி. எஸ். விமலா, மதுரை - 625 009, 79) எஸ். ஜெயலட்சுமி, மதுரை - 625 002, 80) என். ஜி. திருவேங்கடம், திருப்பத்தூர் - 635 601, 81) ஜே. சுமதி, கரூர் - 639 001, 82) எஸ். பி. சதாசிவம், புதூர் - 638 453, 83) வெ. சொர்ணம், நாகூர், 84) ஆர். வெங்கடேசன், நெய்வேலி - 607 803, 85) எம். பரமேஸ்வரன், பரமக்குடி - 623 707, 86) சிவ. கருப்பையா, தலைவாசல், (சேலம்), 87) வித்யாவதி ஜனார்த்தனம், திண்டுக்கல் - 624 001, 88) எஸ். பி. வெங்கடசுப்பிரமணியன், மதுரை - 625 011, 89) பி. சீதா, பரமக்குடி - 623 707, 90) சண்முகம், சேலம் - 636 112, 91) எஸ். இந்திராதேவி, திருச்சி - 4, 92) டி. சந்திரசேகரன், தர்மபுரி - 636 705, 93) கிரிஜா ரங்கசாமி, தானே - 400 605, 94) ஆர்க். எழிலன், திருச்சி - 620 002, 95) ந. ரமேஷ் பாபு, காஞ்சிபுரம் - 631 503, 96) அ. சம்பந்தமூர்த்தி, தஞ்சாவூர் - 613 005, 97) ஆர். காந்திமதி, காட்டுமன்னார் கோவில் - 608 301, 98) எம். கலியபெருமாள், திருவெண்காடு - 609 114, 99) பி. பன்னீர்செல்வி, திருப்பூர் - 638 604, 100) பி. ஜெயவேல், சிதம்பரம் - 608 001, 101) பி. கல்யாணி ராமசாமி, திருச்சி - 10, 102) ஆர். சொக்கன், பெங்களூர் - 560 013, 103) கே. சாரங்கதரன், பூந்தோட்டம் அ. நி. - 609 503, 104) அ. மணிகண்டன், மதுரை - 625 601, 105) அ. செபாஸ்டின், கனியல் அ. நி. - 629 101, 106) கே. ஜெகநாத ராஜா, இராஜபாளையம் - 626 117, 107) ஏ. மணி, பண்ருட்டி - 607 106, 108) வி. ஸ்ரீனிவாசன், கள்ளக்குறிச்சி - 606 202, 109) சி. பாலசந்தர், சிவகங்கை - 623 560, 110) ஆர். கணேசன், பாண்டிச்சேரி - 605 001, 111) நா. சூரியா, ஈரோடு - 638 001, 112) ஆ. சந்தியா, திருச்சி - 2, 113) கே. ஸ்ரீதரன், ஈரோடு - 638 009, 114) முருகேஷ், ஈரோடு - 4, 115) ஆர். சீதாராம், கோயமுத்தூர் - 1, 116) வெ. ஸ்ரீநிவாசன், கோயமுத்தூர் - 641 031, 117) கல்யாணி கிருஷ்ணமூர்த்தி, கோவை - 642 104, 118) வி. கலியபெருமாள், தஞ்சாவூர் - 613 006, 119) ஜே. பிரபாகர், டி. கே. வரம் - 607 105, 120) என். பாலசுப்ரமணியன், தேனி - 626 531, 121) ஆர். சக்ரவர்த்தி, விழுப்புரம் - 607 101, 122) க. இரவிச்சந்திரன், திருச்சி - 639 202, 123) எஸ். கணபதி, கல்லல் - 623 305, 124) கோகிலா பால்ராஜ், திருவத்திபுரம் அ. நி., 125) கே. மாணிக்க சுந்தரம், ஈரோடு - 638 316, 126) இந்துமதி, கரூர் - 639 001, 127) க. தனசேகரன், சாட்சியபுரம் - 626 124, 128) டி. ஜெயசன், தூத்துக்குடி - 628 001, 129) எஸ். முத்துகுமார், நாமக்கல் - 637 002, 130) ஒய். ஜாமில் ஜாக்களின், நெல்லிக்குப்பம் - 607 105, 131) டி. முருகன், இராசிபுரம், 132) ஏ. ராம்பிரபு, புத்தூர், (சீகாழி) - 609 108, 133) எஸ். விவேகானந்தன், நெய்வேலி - 607 803, 134) எஸ். பாலகணபதி, சிதம்பரம் - 608 201, 135) டாக்டர். எஸ். ஹரிஹரன், கும்பகோணம் - 612 001, 136) டாக்டர். டி. வி. சண்முகசுந்தரம், தர்மபுரி - 635 307, 137) பி. கருணாகரன், திருச்சூர் - 680 553, 138) ஆர். புஷ்பம், தஞ்சாவூர் - 613 001, 139) கே. ரகுபதி, மன்னார்குடி - 614 015, 140) பி. ஆர். பார்த்தசாரதி, மன்னார்குடி - 614 012, 141) ஆர். பாண்டியன், மதுரை - 626 530, 142) க. மலையபெருமாள், கடலூர் - 607 001, 143) ஜி. அருணாசலம், தஞ்சாவூர் - 613 009, 144) எம். பாஸ்கர், தஞ்சாவூர் - 613 002, 145) பத்மா கண்ணன், ஆடுதுறை - 612 101, 146) ஆர். சவரிமுத்து, கீழசூர் - 621 653, 147) ர. ராசசேகர், கோவை - 105, 148) ஐ. ஜெகநாதன், சித்தயன் கோட்டை - 624 708, 149) கே. காயத்ரி, திருப்பூர் - 638 601, 150) டி. வெங்கடாசலபதி, மேட்டூர் அணை - 3, 151) வி. ஆர். குப்புசாமி, திருப்பூர் - 638 601, 152) எஸ். பி. நாச்சியப்பன், திண்டுக்கல் - 624 007, 153) சி. தேவராஜ், சேலம் - 636 112, 154) சி. ராஜேஸ்வரி, திருச்சி - 621 010, 155) சித. வயிரவன், புதுவயல் - 623 108, 156) எஸ். சிவகாமி, பெங்களூர் - 560 016, 157) சாந்தா தேவி, கோயமுத்தூர் - 641 012, 158) மு. ஆதி நாராயணன், மதுரை - 625 003, 159) ஆர். வெங்கட்ராமன், திண்டுக்கல் - 624 001, 160) ஆர். அலமேலு, தஞ்சாவூர் - 613 007, 161) க. முத்துக்குமார், புதுதில்லி - 110 005, 162) கே. டி. குமார், பரமக்குடி - 623 707, 163) என். பார்வதி, பாலக்காடு - 679 514, 164) கே. வி. எஸ். சுந்தரம், திருச்சிராப்பள்ளி - 620 003, 165) ஏ. மார்க்கண்டேய வேல்ராஜன், கொல்லம் - 1, 166) என். தர்மராஜன், புதுக்கோட்டை - 622 001, 167) பி. முரளி, கோவை - 641 044, 168) அருந்ததி ராமநாதன், மதுரை - 625 401, 169) எஸ். வி. எம். காமராஜ், சிவந்திபுரம் - 627 433, 170) டாக்டர். அகஸ்டின் அப்பாதுரை, மதுரை - 625 010, 171) ஆர். விஜயலெட்சுமி, மானாமதுரை, 172) என். கிருஷ்ணன், சேலம் - 637 403, 173) எஸ். கோமதி, டோம்பிவிலி - 431 202, 174) விஜயந்தி இராமராஜ், மேலகரம் - 627 818, 175) அரிமழம் எஸ். சிவகுமார், பாண்டிச்சேரி - 605 001, 176) டாக்டர். டி. கோவிந்தராஜ், தஞ்சாவூர் - 613 007, 177) டாக்டர் எஸ். குமார், பெல்நாடு, கர்நாடகா 178) கே. சுப்பிரமணியன், தூத்துக்குடி, 179) வி. விட்டோபாய், பாண்டிச்சேரி - 605 004, 180) கமலா மோகன், கும்பகோணம், 181) பி. கமலாம்பாள், கும்பகோணம் - 612 001, 182) வி. சுப்ரமணியன், தஞ்சாவூர் - 613 001, 183) கே. சந்திரசேகர குருக்கள், காரமடை - 641 104, 184) பி. சரஸ்வதி, பாம்பே - 400 098, 185) டி. எஸ். பழனியப்பன், கம்மாபுரம் - 606 103, 186) கே. நாகராஜன், தஞ்சாவூர் - 614 201, 187) வ. மதிவாணன், பெருமங்கலம் - 606 204, 188) எஸ். சங்கர்லால், கோயமுத்தூர் - 641 024, 189) ஆர். வெங்கடசுவாமி, எழுமேடு - 607 104, 190) எம். வி. எம்.

முத்து கப்பையா, வலையபட்டி - 622 411, 191) கே. மதுரம், திருவிடைமருதூர் - 609 802, 192) மு. ரத்தினவேல், மதுரை - 625 019, 193) ஏ. மணி மேகலை, நாகை எருக்கம்மாஞ்சேரி - 609 307, 194) ஏ. எஸ். நாராயணன், வைப்பூர் - 610 101, 195) வி. எஸ். நல்லுசாமி, காரைக்கால் - 609 609, 196) எஸ். ராமசுப்ரமணியன், தானே - 400 601, 197) இரா. மாரிமுத்து, வேளாங்கண்ணி - 611 111, 198) எம். சாரதா, செங்கோட்டை - 627 809, 199) என். விஜயலட்சுமி, கும்பகோணம் - 612 001, 200) ஆர். மீனாட்சி, கும்பகோணம் - 612 001, 201) பி. பிரபாகரன், துறையூர் - 621 010, 202) ஆர். மனோகரன், திண்டுக்கல் - 624 003, 203) எம். ராஜப்பா, மதுரை - 625 010, 204) கே. சாந்தி, புதுவை - 605 010, 205) எஸ். சுதாகர், பேராவூரணி - 614 804, 206) க. முருகேசன், சேலம் - 636 103, 207) பால. அசோகன், மேலவாசல் - 614 012, 208) எம். காத்தலிங்கம், கரூர், (திருச்சி), 209) எஸ். செந்தில்குமார், கீழ்வேளூர் - 611 104, 210) என். இரகுநாதன், சின்னாங்குப்பம் - 636 903, 211) ஆர். முருகேசன், தர்மபுரி - 636 701, 212) அ. வெங்கடா சலம், சேலம் - 637 503, 213) காந்திமதி வைத்ய ராம், புதுதில்லி - 110 019, 214) எம். வசந்தகுமாரி, தஞ்சாவூர், 215) எஸ். ஆறுமுகம், கோவை - 638 207, 216) டி. எஸ். சீதாராமன், கும்பகோணம் - 612 001, 217) என். பிரகாஷ், ராஜபாளையம், 218) வி. இராமகிருஷ்ணன், கோயம்புத்தூர் - 641 002, 219) கி. ஜீவானந்தம், கோவை - 8, 220) ஆர். நாகராஜன், செம்பனார் கோவில் - 609 309, 221) சா. காளி முத்து, தஞ்சை - 612 801, 222) டி. அரசன், பெங்களூர் - 560 014, 223) வே. சுப்பிரமணியன், அம்பாசமுத்திரம் - 627 401, 224) ஜே. ஆர். தாஸ், புதுதில்லி - 110 001, 225) எம். செங்குட்டுவன், தஞ்சை - 613 703, 226) சி. ராமச்சந்திரன், கீழக் காட்டூர் - 609 807, 227) ஆர். முத்துசாமி, திருச்சி - 2, 228) எம். ராமச்சந்திரன், திருவிளையாட்டம் அ. தி., (நாகை), 229) என். மரியம்மாள், மதுரை - 1, 230) என். வைத்தியநாதன், செகந்திரா பாத் - 500 025, 231) கா. மாரியப்பன், மதுரை - 625 001, 232) என். ஆண்டாள் ஹயக்ரீவன், பொன் னேரி - 601 204, 233) வி. தீபா, திருச்சி - 620 003, 234) எஸ். சிவபாலன், வடபாதிமங்கலம் - 610 206, 235) எஸ். கோபாலன், ஹைதராபாத் - 500 047, 236) எஸ். இராமச்சந்திரன், நெய்வேலி - 607 803, 237) ஜி. ஆர். செந்தில் குமார், கோயமுத்தூர் - 641 037, 238) வி. நாராயணசாமி, தஞ்சாவூர், 239) எஸ். கோலப்ப பிள்ளை, இரணியல், - 629 802, 240) வி. சி. சேகர், பண்ருட்டி, 241) எஸ். கலைச்செல்வி... [see note] விழுப்புரம் - 605 602, 242) வி. பரி வாதினி, திருச்சிராப்பள்ளி - 12, 243) எல். ரேவதி, திருச்சி - 620 004, 244) ஜே. ஜோசப் அருள் சேவியர், திருச்சி - 620 004, 245) ஏ. கே. சண்முகம், சேலம் - 636 001, 246) எஸ். ஜெய ராமன், ஓசூர் - 635 125, 247) எம். ஸ்ரீராம், திரு விடைமருதூர் - 612 104, 248) ஜே. கு. ஆர்த்தி, பழைய சிறுக்குவார்பட்டி - 624 215, 249) ஆர். வரதராஜன், சேலம் - 637 303, 250) ஆர். சாந்தா, சோழவந்தான் - 624 214.

(பட்டியல் அடுத்த வாரம் தொடரும்)



பம்பாயில் விளம்பரத் துறையில் பிரசித்தி பெற்ற திரு C.R.M. சுவாமி அவர்களின் குமாரியும், கல்கி நிறுவனத்தின் பம்பாய் பிரதிநிதி திரு ஆனந்த் ஸ்வாமி அவர்களின் சகோதரியுமான சௌபாக்கியவதி ரேவதிக்கும் கல்லிடைக்குறிச்சி ஸ்ரீ ராமச்சந்திர அய்யர் அவர்களின் குமாரன் சிரஞ்ஜீவி விஸ்வனாதனுக்கும் சமீபத்தில் பம்பாயில் மிகச் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. மாலையில் நடந்த வரவேற்புக்குப் பல பிரமுகர்கள் வந்து சிறப்பித்தனர். வாழ்க மணமக்கள்!

● வி.பி. மகராசி, மதுரை - 16.

**? காதலும் வன்முறையும் தானே தமிழ் சினிமாக்களை அதிகம் ஆக்கிரமித்துள்ளது?**

! ஒரு சின்ன கரக்ஷன். காதல் என்பது தூய்மையானது. உங்கள் கேள்வி 'காமமும் வன்முறையும்' என்று அமைதல் வேண்டும். ''இதைத்தான் ரசிகர்கள் விரும்புகிறார்கள்'' என்று சினிமாத்துறையினர் கூறுவது சால் ஜாப்பு. நல்ல படங்களை ரசிகர்களைக் கவரும் விதமாகவும் எடுக்க இவர்களுக்குத் தெரியவில்லை என்பதே அர்த்தம். அதனால், ஆபாசம் மற்றும் வன்முறைகளைக் கொடுத்துக் காசாக்கிக் கொண்டு ரசிகர்கள் மீதே பழியைப் போடுகிறார்கள்.



நடராஜன் தூது!



சூப்பர் ஸ்டார்

# இசைவிழாவின் சூப்பர் ஸ்டார் யார்?

● அ. தாஜ் மஜீத், திருமயம்.

**? கணவனும் மனைவியும் வேலை பார்க்கும் போது வளமாக வாழ்கிறார்கள். எனவே ஒருவர் மட்டும் வேலை பார்க்கும் குடும்பத்துக்கு அரசு உதவிப் பணம் வழங்கினால் என்ன?**

! தேர்தல் சமயத்தில் சொல்லுங்கள், இந்த யோசனையை. 'அடுத்து இன்னும் என்ன இலவசம் அறிவிக்கலாம்' என்று மண்டையை உடைத்துக் கொள்ளும் அரசியல்வாதிக்கு உபயோகமாய் இருக்கும்!

● என். ஷேக் அலாவுதீன், திருநெல்லிக்காவல்.

**? ரொம்ப போரடிக்குது ஸார், பிளீஸ் ஒரு ஜோக்?**

! ''இந்திய மொழிகளுக்குப் பொதுவாக உள்ள வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்து ஒரு புதிய பொது மொழி உருவாக்க மத்திய அரசின் மனித வள மேம்பாட்டுத் துறை முயற்சி எடுக்க வேண்டும்!'' - ஒரு மத்திய அமைச்சர் சொன்ன இந்த யோசனை 1991 ம் ஆண்டின் மிகச் சிறந்த ஜோக்காகத் தேர்ந்தெடுக்கிறேன்!

● நிவேதிதா, திருச்சி.

**? சமீப காலத்தில் அரசியல் வார இதழ்கள் நிறையத் தோன்றியிருக்கின்றனவே?**

! அரசியல் வார இதழ்களை வரவேற்கலாம்; அவதூறுகளையும் ஆபாசத்தையும் வாரி இறைக்கும் இதழ்களை அல்ல.

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

**? ''புராணங்களின் தூய்மையையும் பக்தியின் புனிதத்தையும் கருத்தில் கொண்டு தான் தாம் பக்திப் படங்களை எடுப்பதில்லை'' என்று டைரக்டர் கே. பாலசந்தர் குறிப்பிட்டிருப்பது சரியா?**

! கே.பி. என்றுமே புத்திசாலி. இந்த அறிவிப்பிலும் அப்படியே.

● மஞ்சுதேவன், கல்கத்தா.

**? ''அரசியலை விட்டு விலகப் போவதில்லை'' என்கிறாரே, கோர்பசேவ்?**

! அதனாலென்ன, அரசியல்தான் அவரை விட்டு விலகிப் போய்விட்டதே!

● என். சுரேஷ், சேலம்.

**? ''உண்மையான ஜனதா தளம் அமைக்கப் பாடுபடுவேன்'' என்கிறாரே, அஜித் சிங்?**

! அது காங்கிரஸுக்குள் அமையப் போவதாகக் கேள்வி!



என்றுமே புத்திசாலி



''விலகமாட்டேன்!''



ஆமை வேகம்?



உண்மையான ஜனதா தளம்!

● அ. சு. கிருஷ்ணன், வியாசர் நகர்.

*? இந்தப் புத்தாண்டில் முதன் முதலில் உங்களைக் கவர்ந்தது?*

! செவிப்பறையைக் கிழிக்கும் பட்டாசு சத்தம். தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு எழ, கடிகாரம் 12 அடித்தது. ஆரம்பம் இதமாக இல்லை.

● மலை அரசன், வேலூர்.

*? 1992 ல் வன்முறைகள் குறைந்து மனிதாபிமானமும் ஒற்றுமையும் தழைத்தோங்குமா?*

! அது நம் நாட்டின் மத்தியிலும் பல்வேறு மாநிலங்களிலும் உள்ள தலைவர்களின் புத்திசாலித்தனத்தைப் பொருத்த விஷயம் என்பதால் சந்தேகமாகவே இருக்கிறது!

● த. சத்திய நாராயணன், அயன்புரம்.

*? "எவனா இருந்தா எனக்கென்ன?" தலைப்பு எப்படி?*

! 'தலைப்பு என்னவா இருந்தா எனக்கென்ன?' என்று ஒதுங்க முடியாதபடிக்குச் சென்னை நகரச் சுவர்கள் பாழ்படுத்தப் பட்டிருக்கின்றன.

● ஏ.டி. பூவராகன், விருத்தாசலம்.

*? தலைவர்களின் சமாதிகளுக்கு 40 ஏக்கர் 60 ஏக்கர் என்று நிலம் ஒதுக்குவது தேவையா?*

! அந்த மட்டில் காங்கிரீட் காடுகள் தோன்றாமல் வனங்கள் தோன்றினால் வரவேற்கலாம்தான்.

● எஸ்.பி. சங்கர், மேட்டு மகாதானபுரம்.

*? கர்நாடக தமிழர்களைக் காப்பாற்ற ஜெயலலிதா ஆமை வேகத்தில் செயல்படுகிறாரே?*

! யார் சொன்னது? பந்த் நடத்த எதிர்க்கட்சியினர் வெள்ளிக்கிழமையைத் தேர்ந்தெடுத்தால், வேண்டாம் வியாழனன்றே வைத்துக் கொள்ளலாம் என்று சுறுசுறுப்புக் காட்டியிருக்கிறாரே! அடுத்து பங்காரப்பா, எனக்கும் பந்த் நடத்தத் தெரியும் என்று நிரூபித்துக்காட்ட வேண்டியதுதான் பாக்கி.

உற்பத்தி பெருகவும் காவிரி பிரச்னை தீரவும் இதைவிடச் சிறந்த உபாயங்கள் வேறென்ன இருக்க முடியும்!

● எஸ். ராமசுப்பிரமணியன், வீரவநல்லூர்.❑

*? இந்த வருடம் இசை விழாவின் சூப்பர் ஸ்டார் யார்?*

! நிறைய ரசிகர்களை ஈர்க்கும் பல வித்வான்கள் அற்புதமாகப் பாடி மகிழ்விக்கிறார்கள், உண்மை. ஆனால் இன்னார் பாடுகிறார் கேட்க வேண்டும் என்றுதான் ரசிகர்கள் கிளம்புவார்கள். இன்னார் பக்க வாத்தியம் வாசிக்கிறார் கண்டிப்பாகப் போக வேண்டும் என்று எண்ணுமளவுக்கு வாசிப்பவர் கனடா நாட்டிலிருந்து சீஸனுக்கு மட்டும் வந்து போகும் திருச்சி சங்கரன். மிருதங்க சூப்பர் ஸ்டார்தான் - சந்தேகமில்லை.

● ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.

*? முக்கிய பதவி அளிப்பதாகக் கூறி 'அம்மா' நாஞ்சில் மனோகரனுக்கு நடராஜன் மூலம் தூது அனுப்பினாராமே?*

! 'நடராஜன் பேச்சுக்கு மதிப்புத்தர வேண்டாம்; அவர் என் கருத்துக்களைப் பிரதிபலிப்பதாகக் கொள்ள வேண்டாம்' என்று 'அம்மா' திட்டவட்டமாய் அறிவித்த பிறகும் நாஞ்சிலார் இதில் பெருமைப்பட நினைத்தால் அது நாஞ்சிலார் தவறே அன்றி, 'ஜெ' மீது குற்றமில்லை; நடராஜனின் தவறும் இல்லை!

● வ.தே.பா., சென்னை.

*? இசை விழாவின் சிறப்பு அம்சம்?*

! ஆடியோ எலெக்ட்ரானிக் நிறுவனத்தினர் இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி, பிரபல வித்வான்கள் பாட்டுக்களைப் பதிவு செய்ய நினைக்காமல், பொது மக்களில் நல்ல குரல் வளமும் இசை ஞானமும் உள்ளவர்களின் பாட்டைப் பதிவு செய்ய முன் வந்து ஒரு திட்டம் வகுத்திருப்பதுதான். வரவேற்று வாழ்த்த வேண்டிய நல்ல முயற்சி.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர்
எஸ். ராமசுப்பிரமணியன்,
68, மேலத் தெரு,
வீரவநல்லூர் - 627 426
(நெல்லை மா.வ.)

பொன் விழா
கவிதைப் போட்டி

# இன்றைய இளைஞனே இது உனக்கு...

அதற்கும் இன்றி இதற்கும் இன்றி
வாழ்வை அணுகாதே!
அவனே வந்து சமர்என நிற்பினும்
அச்சம் கொள்ளாதே!!
பதக்கம் கோடி பெற்ற போதும்
திருப்தி வைக்காதே!!
பந்தய வாழ்வை உணர்வின் கால்களால்
உதைக்கத் தயங்காதே!

ஒதுக்குப் புறமாய் ஒடுங்கிக் கிடந்து
உன்னை மறைக்காதே!
ஓடும் உலகில் முதன்மை வெற்றிகள்
உனக்கே மறக்காதே!!
குதர்க்கம் பேசும் கூட்டம் கண்டு
குடைச்சல் கொள்ளாதே!
குறிக்கோள் உள்ளோர் குழம்பிக் கிடத்தல்
என்றும் கிடையாதே!!

விதியே என்று வாழ்வதி னாலே
பலன்கள் கிடையாதே!
விதியே கூட விதிர்விதிர்த் திருக்கும்
வீரியம் தாழாதே!!
புதிதாய்ப் பிறந்த புயல்போல் உள்ள
புத்தியை மாற்றாதே!
'ப்பூ'வென ஊதிப் பொய்மையைச்
சாய்க்கும்
செயல்களில் மாறாதே!!

கதியாய் உனையே கணித்திடும் இப்புவி
கொள்கை குலையாதே!!
கால்கள் தூக்கிக் கடமையால் மோது
குறுகல் கூடாதே!!
சதமாய் உனக்கும் சாஸ்வதம் உண்டு
சமரில் தளராதே!
சமாதி தன்மை தீமைகள் பெறும்வரை
விழிகள் மூடாதே!!

ப்ரியங்கா
அறிமுக எழுத்தாளர்.



# 'அடடா' இருக்க 'அப்பாடா' எதற்கு?

மாலை வீடு திரும்பியதும் டீவியை ஆன் பண்ணிவிட்டு ஈஸிசேரில் அப்பாடா என்று விழுந்தால், இரவு பதினோரு மணிக்குத் தூக்கம் கண்ணை அழுத்தும் வரை அப்பாடாதான்! டீவி வந்தாலும் வந்தது படிக்கும் வழக்கமே போய் விட்டது. பிறகு புத்தகம் வாங்குவது என்பது ஏது?

இந்தக் குறையை நீக்கி, புத்தகங்கள் படிப்பது எவ்வளவு முக்கியம் என்பதை மக்களுக்கு உணர்த்த அவசியம் ஏற்பட்டுள்ளது. இதற்காகத்தான் புத்தகக் கண்காட்சி ஆண்டுதோறும் நடக்கிறது.

சென்னை புத்தகக் கண்காட்சியில் இந்த ஆண்டு ஒரு சிறப்பு அம்சம், ராஜ்மோகன் காந்தி, வல்லிக் கண்ணன் ஆகிய எழுத்தாளர்களுக்குப் பாராட்டு. சதானந்த் என்ற முதுபெரும் புத்தக விற்பனையாளரும் கௌரவிக்கப்படுகிறார்.

எல்லாத் தமிழ் நூல்களையும் ஒரே இடத்தில் காணலாம் என்பது கூடுதல் சிறப்பு. ஆங்கில நூல்களும் ஏராளமாய்க் குவிந்திருக்கும். புத்தகங்களைத் தொட்டுப் பார்க்கலாம்; புரட்டிப் பார்க்கலாம்; வாங்குமுன் கொஞ்சம் படித்துக் கூடப் பார்த்து விடலாம்! இந்தச் சலுகைக்காகத் தருவது நுழைவுக் கட்டணமாக ரூ. 2 மட்டுமே. ஆனால் வாங்கும் நூல்கள் அனைத்துக்கும் பத்து சதம் தள்ளுபடி உண்டு.

இந்த ஆண்டு ஒரு புதிய திட்டத்தை யோசித்து அறிமுகப்படுத்தியிருக்கிறார் திரு கிருஷ்ணமூர்த்தி. திருமணம், மற்றும் விசேஷங்களுக்கு நண்பர்களுக்கும் உறவினருக்கும் புத்தகங்கள் பரிசு அளிக்கலாம் என்ற யோசனையைப் பலர் கூறி வந்திருக்கும் போதிலும் நிறைவேற்ற முடியாமல் குறுக்கே நிற்கும் விஷயம் ஒன்றுண்டு. அதாவது நாம் வாங்கிப் பரிசளிக்கும் நூல் நண்பருக்குப் பிடிக்குமோ பிடிக்காதோ என்ற தயக்கம்தான்.

இந்தக் குறை களைய இந்தக் கண்காட்சியில் கூப்பன்கள் விற்பனை நடக்கிறது. ரூ. 30, ரூ. 50 என்று மதிப்புள்ள கூப்பன்களை வாங்கி நீங்கள் பரிசளித்து விடலாம். பரிசு பெறும் நண்பர் புத்தகக் கடைக்குப் போய், கூப்பனைக் கொடுத்துத் தமக்குப் பிடித்தமான நூலைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். கூப்பன் நிர்வாக மையத்துக்கு அனுப்பப்பட, கடைக்காரருக்குக் கூப்பனுக்குரிய தொகை கிடைத்து விடும்!

அடடா! நல்ல ஏற்பாடாச்சே என்கிறீர்களா? எங்கே, வெற்றிகரமாகச் செயல்பட உதவுங்கள் பார்க்கலாம்!

**- குமரன்**

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 200/- விமானத் தபால்: ரூ. 525/-.

THE GINSENG HEALTH

# உங்களால் முடியும்!



பகிர்ந்து வாழ்வதில் ஏற்பட்ட மகிழ்ச்சி, ஒன்று கூடி இன்பமாகக் கழிந்த நாட்கள் இவையெல்லாம் நினைவிருக்கிறதா? ஆம், அந்நாட்களில் உள்ளம் நாடியதற்கேற்ப உடல் ஒத்துழைத்தது.

அந்நாட்களைத் திரும்பப் பெற வேண்டுமா? உபயோகியுங்கள் **வினோஃபிட்** ஜின்ஸெங்*.

**வினோஃபிட்**-ல் கொரியாவின் ஜின்ஸெங் மற்றும் இன்றியமையாத மூலிகைச் சாறுகள் சேர்ந்துள்ளதால் உடலின் இரத்த ஓட்டம், ஜீரண சக்தி மற்றும் இன்றியமையாத உறுப்புகளின் செயலாற்றம் மேம்படுத்தப்படுகிறது. மேலும், சோர்வு குறைந்து உடலில் சக்தி அதிகரிக்கிறது.

இதைத்தவிர, **வினோஃபிட்** சருமத்தை எழிலடையச் செய்து, நோய்களை எதிர்க்கும் திறனை உடலிற்கு அளித்து மூளையின் செயலாற்றலை அதிகரிக்கிறது.




(பெரிய அச்செழுத்துக்களில் எழுதவும்)

பெயர் : ..........

முகவரி ..........

..........

நகரம் : .......... பின் : ..........

**வினோஃபிட்**
**ஜின்ஸெங்**

வோக்ஹார்ட் வழங்கும் தரமான தயாரிப்பு

## வாழ்வில் துடிப்புணர்வுடன் வாழ.

TRITON/91/WL/174/TM

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka



# எங்கும் IHFD பற்றியே பேச்சு
# எல்லோருக்கும் சொந்த வீடு உறுதியாச்சு
# பங்கு கொண்டே நல்ல பலன் அடைவோமே
# அதன் விளைவிலும் லாபம் பெறுவோமே



IHFD வளர்ச்சியும் வெற்றியும் மிகுந்த ஒரு நிறுவனம். IHFD வீட்டுக் கடன் வசதி திட்டங்களில் பல புரட்சிகரமான அம்சங்களைப் படைத்த ஒரு ஸ்தாபனம். மேலும், நேஷனல் ஹவுஸிங் பேங்க் (ரிசர்வ் பேங்க் ஆஃப் இந்தியாவினால் முற்றும் உடைமையாக்கப்பட்டது) மற்றும் இந்திய அரசின் அங்கீகாரம் பெற்றது.

IHFD நிலவும் கட்டிடமும் மட்டுமே அளிக்கக் கூடிய பாதுகாப்பும், உறுதியும் தரும் ஒரு நிறுவனம். இதுவரை 2300 லட்சத்திற்கு மேல் சுமார் 3500 பேருக்கு வீட்டுக் கடன் வசதி அளித்துள்ளது. மொத்த லாபத்தில் 300 சதவீதத்துக்கு மேல் வளர்ச்சி பதிவு செய்து முன்னுரிமை பெற்ற ஒரு ஸ்தாபனம். இது மட்டுமா? கடந்த வருடம் அறிவிக்கப்பட்ட டிவிடெண்ட் - 14%!

## விரைவில் IHFD அதன் லாபத்தின் பங்குகளை
## உங்களுடன் பகிர்ந்து கொள்ள வாய்ப்பளிக்கும்

IHFD ரூ. 5 கோடி மதிப்புள்ள உரிமை பங்குகளும், ரூ. 6 கோடி மதிப்புள்ள கடன் பத்திரங்களையும் உங்களுக்கென வெளியிடும்.

வாரீர், இந்த வாய்ப்பை கொண்டாட, ஆடுவோம், பள்ளு பாடுவோம்.

| இருப்புக்கள் | வீட்டுக்கடன் மீது வட்டி | லாபம் | வருமானம் | கடன் விகிதாசாரம் | அங்கீகரிக்கப்பட்ட கடன் |
|---|---|---|---|---|---|
| 2 | 3 | 3.5 | 4 | 4.5 | 5.5 |
| மடங்கு | மடங்கு | மடங்கு | மடங்கு | மடங்கு | மடங்கு |




## இந்தியா ஹவுசிங் ஃபைனான்ஸ் & டெவலப்மெண்ட் லிமிடெட்

29, Whites Road, Madras 600 014. Tel: 867125/866541 Telex: 41-5128 IHFD IN Fax: 861946

தமிழ்நாடு: சிதம்பரம் • கோயம்புத்தூர் • கடலூர் • தர்மபுரி • ஓசூர் • சென்னை • கரூர் • மதுரை • மன்னார்குடி • மயிலாடுதுறை • புதுக்கோட்டை • சேலம் • திருச்சி • வேலூர் • கும்பகோணம் திருநெல்வேலி • ஈரோடு. ஆந்திரப்பிரதேசம்: பீமாவரம் • கடப்பா • குண்டூர் • ஹைதராபாத் • கம்மம் • காக்கிநாடா • கர்நூல் • நெல்லூர் • ராஜமுந்திரி • உடுமலைப்பேட்டை • திண்டுக்கல் • பொள்ளாச்சி • ஸ்ரீகாகுளம் • திருப்பதி • விஜயவாடா • விசாகப்பட்டினம். கர்நாடகா: பெங்களூர். கேரளா: எர்ணாகுளம் (கொச்சின்) • திருவனந்தபுரம். மகாராஷ்டிரா: பம்பாய்.

